

சிறந்த முறையில் சித்திரிக்கப்பட்டுள்ள



நல்லதொரு படத்தைப்



பார்க்கவேண்டுமானால்

இப்படத்தைப் பார்க்காமலிருக்க முடியாது





ஜெமினியின்

# அபூர்வ சகோதரர்கள்



இப்பொழுது சென்னை **பிரபாத், வெலிங்டன்**
இரு தியேட்டர்களிலும் மற்றும்
இந்தியா முழுவதும் **நடைபெறுகிறது.**

**சென்னையில்:** தினசரி 3 காட்சிகள் 3, 6-15 & 9-30 மணி

பிரதி தினமும் காலை 9 முதல் 12 மணி வரை, முதல் இரண்டு வகுப்புகளுக்கும் பிரபாத், வெலிங்டன் தியேட்டர்களில் டிக்கட்டுகளை முன்னதாகவே பெற்றுக் கொள்ளலாம்

சுகசௌகரியத்திற்கு

# காட்ஸ்வாலுக்கு

மிஞ்சின
துணி
இல்லை

குழந்தைகள், பெரியவர்கள் யாவருக்கும் எக்காலத்திலும் சாதாரணமாக அணிவதற்குகந்தது.

உடம்பை சமசீதோஷ்ணமாக வைத்திருக்கும் காட்ஸ்வால் ஆடைகள் அணிந்து, உங்கள் தேகோஷ்ணத்தை நிலைப்படுத்துங்கள்!

உங்கள் துணிக் கடையில் இப்போதே போய் விசாரியுங்கள்!

சலவை விதிகள்: கம்பளித் துணிகளைப்போல லக்ஸ் சோப்புச் சீவல் அல்லது வாஷிங் சோப்பு உபயோகித்து வெதுவெதுப்பான நீரில் சலவை செய்யவும்.

தி பெங்களூர் உலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிட்., பெங்களூர் ஸிடி.

ஏஜண்டுகள், காரியதரிசிகள், பொக்கிஷதாரர்கள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்.

**Cotswol**

தயாரிப்பவர்கள்:
**தி பெங்களூர் மில்ஸ்**



மற்றுமொரு பிரசித்த ஆமோரக் துணி

**பிரதேசவார் விநியோகஸ்தர்கள் :**

பெங்களூர் ஸிடி: மெஸர்ஸ். எஸ். ஏ. ஆர். முகமது சேட் & ஸன்ஸ், சிக்பேட்
மெஸர்ஸ். ஹாஜி இப்ராஹிம் இஸ்மாயில் & ஸன்ஸ், சிக்பேட்
மெஸர்ஸ். ராம் நாராயண் கிஷன் தாஸ் & கோ., தொட்டபேட்
மதராஸ்: மெஸர்ஸ். எஸ். ஏ. ஆர். முகமது & ஸன்ஸ், 6, கிடங்கு தெரு, ஜி. டி.

இல்லந்தோறும் யாவரும் விரும்புவது

# காவேரி பார் ஸோப்

சிறந்த சலவைக்கு உன்னத சாதனம்

•

தயாரிப்பவர்கள் :

## மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை - சேலம் - தென் இந்தியா

•

பூரண விற்பனை ஏஜண்டுகள்:

## அல்லைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்டிரிப்யூட்டர்ஸ் லிமிடெட்

120, அரண்மனைக்காரத் தெரு - மதராஸ் - 1

கிளைகள் : பெஜவாடா, கள்ளிக்கோட்டை, கோயமுத்தூர்
கும்பகோணம், மேட்டூர் அணை, சேலம்,
திருச்சிராப்பள்ளி, ஹைதராபாத், திருவனந்தபுரம்

கீழ் குறிப்பிட்டவர்களிடமும் கிடைக்கும்

மெஸர்ஸ். பி. வி. ஆர். சீனன்ஸ்,
102, காணிவிலாஸ் ரோடு. பெங்களூர்

ஸ்ரீ ஜி. ராஜகோபாலன்,
173/6, பிராம்மண வீதி. சித்தூர்

மெஸர்ஸ். வாசன் ஸோப் ஒர்க்ஸ்,
105, சன்னத் தெரு. பெரிய காஞ்சீபுரம்

ஸ்ரீ வி. ஆர். சுந்தரராஜ செட்டி,
21, மிஷன் தெரு. கடலூர் O. T.

ராவ்பகதூர் டி. ஜாஸியா கம்பெனி,
குன்னூர்

தி கெமிகல் ஏஜன்ஸீஸ்,
அருணாசல விலாஸ், காரைக்குடி

ஸ்ரீ மீனாக்ஷி வீவிங் பாக்டரி,
வடக்கு வீதி. கரூர்

மெஸர்ஸ். ஆந்திர கமர்ஷியல்
ஏஜன்ஸீஸ், பிஞ்ஜின் தெரு. கர்நூல்

தி ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-ஏ, அரண்மனைக்கார தெரு. மதராஸ்

தி கெமிகல் ஏஜன்ஸீஸ்,
51, தெற்கு மாசி வீதி. மதுரை

மெஸர்ஸ். ராமநாத் & கோ.,
ஸ்டோன்ஹவுஸ்பேட், நெல்லூர்

தி கெமிகல்ஸ் & டிரக் ஸ்டோர்ஸ் லிட்.,
மார்த்தாண்டபுரம், புதுக்கோட்டை

மெஸர்ஸ். டி. என். சுப்ரமண்யம் & கோ.
C/o ஜயலக்ஷ்மி காப்பி ஓர்க்ஸ்,
அய்யம்பேட்டை, தஞ்சாவூர்

ஸ்ரீ கே. எம். சுப்பையா,
13, தெற்கு ரத வீதி, திருநெல்வேலி

மெஸர்ஸ். எஸ். வி. கே. அய்யர் & கோ.,
கச்சேரி தெரு. திருப்பூர்

தி மைசூர் மர்க்கன்டைல் ஏஜன்ஸி,
கோட்டை ஸ்டேஷன் ரோடு,
தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி

ஸ்ரீ எஸ். டி. ஆசார்யா, C/o
வின்சென்ட் & கோ., திருச்சிராப்பள்ளி

ஸ்ரீ டி. கே. பட்டாபிராமன்,
புஷ்பகிரி, திருச்சூர்

ஸ்ரீ T. C. A. கோபாலகிருஷ்ண செட்டி,
12, பேரி காளியம்மன்
கோயில் தெரு. வேலூர்

மெஸர்ஸ். வீ. வே. ஷாப்,
பெரியர் ரோடு. விசாகப்பட்டணம்

# குழந்தைகளின் ஆனந்தம்!



இன்றைய குழந்தைகளே நாளைய நாட்டு மன்னர்கள். அவர்களுடைய ஆரோக்கிய வாழ்வே நாட்டின் சிறந்த செல்வம். ஆரோக்கியத்துடனிருக்க அவர்கள் குதித்து விளையாட வேண்டியது அவசியம். அவர்களுக்கேற்ற உறுதியான உழைக்கவல்ல பேராம்புலேட்டர்கள், ட்ரைசிக்கிள்கள் ஏராளமாக எங்களிடம் உள்ளன.



## அழகிய வர்ணங்களிலுள்ள
# குழந்தை வண்டிகளை
## வந்து பாருங்கள்

**ராயல் சைக்கிள் & மோட்டார் கம்பெனி,**
13/14, [illegible], சென்னை-1
[illegible]




# கல்கி

## பொருளடக்கம்

மலர் 9 இதழ் 15 | நவம்பர் 13 | விரோதி ஐப்பசி 28





## சேலத்தில் ஆனந்தாஸ்ரம ஸ்வாமிஜி

பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க காஞ்சன்காடு ஆனந்தாஸ்ரம ஸ்வாமிஜி ராமதாஸ் அவர்களும் அன்னை கிருஷ்ணாபாய் அவர்களும் இம்மாதம் 19, 20 தேதிகளில் சேலத்திற்கு வருகிறார்கள். சேலத்தில் அடியிற் கண்டுள்ளபடி ஸ்வாமிஜிகளின் அலுவல்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

19-11-49 தேதி காலை 8 முதல் 9 மணி வரை — பஜனை
.. .. .. 9 முதல் 10 மணி வரை பக்தர்கள் கேள்விக்குப் பதில்
பிரம்ம ஞான சபையில்

.. .. மாலை 6 முதல் 7 மணி வரை — பஜனை
ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில், சிவஸ்வாமிபுரம் எக்ஸ்டென்ஷன்

20-11-49 தேதி காலை 8 முதல் 9 மணி வரை — பஜனை
சன்மார்க்க சங்கத்தில், குகை

பஜனை நேரத்தில் பக்தர்கள் ஸ்வாமிஜியை தரிசனம் செய்யலாம். தனியாக ஸ்வாமிஜியை தரிசிக்க விரும்பும் பக்தர்கள் சேலம் ரிடயர்டு ஹைகோர்ட்டு நீதிபதி திவான் பகதூர் ஸ்ரீ சுந்தரம் செட்டியார் அவர்களுக்கு முன் கூட்டியே எழுதி ஏற்பாடு செய்து கொள்ளவும். ஸ்வாமிஜியும் அன்னை கிருஷ்ணாபாயும் 21-11-49 தேதி ஆனந்தாஸ்ரமத்திற்குத் திரும்பிச் செல்லுகிறார்கள்.

# தவமும் விரதமும்


ஆந்திர மாகாணத்தில் சென்னை நகரைச் சேர்ப்பதற்காக புரொபஸர் ரங்கா சாகும் வரையில் பேசித் தீர்ப்பது என்று திட சங்கல்பம் செய்து கொள்ளலாம்.
சென்னையைச் சேர்த்துக் கொண்டாவது பேச்சை நிறுத்தித் தொலையுங்கள்
.... டாக்டர் பட்டாபி உயிர் போகும் வரை மல் குட்டிக்கரண சத்தியாக்கிரகத்தைக் கைக் கொள்ளலாம்.


.. அல்லது ஸ்ரீ எஸ். வி. ராமமூர்த்தி தாம் கண்டு பிடித்துள்ள செயற்கை அரிசியை எல்லோருக்கும் விநியோ- கிக்க முன் வரலாம்.
.... ஸ்ரீ அனந்தசயனம் நதி பெருக்கிற்கு எதிரே கண்ணீரைப் பெருக்கும் விரதத்தை மேற் கொள்ளலாம்.


.... இத்தனை பேரின் சத்தியாக்- கிரகங்களும் வெற்றி பெறுவதில், பிரகாசம் காரு கூவம் நதியில் கழுத்தளவு தீர்த்தத்தில் நின்று கொண்டு கடுந் தவம் புரியலாம்.
என் தவத்தைக் கலைக்காதீர்



மலர் 9 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி | இதழ் 15

# என்ன சேதி?

## பிரசாரகர்கள் நியமனம்

சென்னை காங்கிரஸ் சர்க்கார் சாதித்துள்ள நல்ல காரியங்களில் பூரண மதுவிலக்கு மிகவும் முக்கியமானது. நன்றை இன்றே செய்யவேண்டும் என்பதற்கிணங்க, கோடிக் கணக்கான தொகை நஷ்டம் ஏற்படுமே என்பதைக் கூட லட்சியம் செய்யாமல் தைரியமாக மதுவிலக்கை உடனே அமுலுக்குக் கொண்டு வந்தபடியால் சென்னையின் புகழ் ஓங்கி நிற்கிறது. ஆனால் அந்தப் புகழுக்கு எந்த விதத்திலும் பங்கம் ஏற்படாமல் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டியது அவசியம். "அவசரப்பட்டு மதுவிலக்கைச் செய்து விட்டார்கள்; அது வெற்றியடையவில்லை" என்ற அவச்சொல் ஏற்படக்கூடாது. பகிரங்கமாய்க் குடிப்பதற்குப் பதில் திருட்டுத்தனமாய்க் குடித்து மக்கள் கெட்டழிவதில் புண்ணியம் ஒன்றும் இல்லை. "குடிப்பது நிற்கவில்லை; சர்க்கார் வருமானம் மட்டும் போயிற்று" என்று மதுவிலக்கு விரோதிகள் கொக்கரிப்பார்கள். ஆகையால் திருட்டுச் சாராயம் காய்ச்சும் குற்றங்களைத் தடுப்பதில் போலீஸார் அதி ஜுரூராயிருக்கவேண்டும். போலீஸ் ஜாக்கிரதை மட்டும் போதுமா?

மதுவிலக்கு உண்மையில் வெற்றிபெற வேண்டுமாயின் ஜனங்களிடையே இடைவிடாத பிரசாரம் அவசியம். பிரசாரத்தின் மூலம் இன்னும்கூட குடிப் பழக்கத்தைக் கைவிட முடியாமல் பாழாகும் மக்களைச் சீர்திருத்த முடியும். எனவே, மதுவிலக்குப் பிரசாரம் செய்வதற்காகச் சென்னை சர்க்கார் மாகாணமெங்கும் நானூறு பிரசாரகர்களை நியமிக்க உத்தேசித்திருப்பது சிறந்த காரியமாகும். "மதுபானம் தீங்கு என்பது எல்லோருக்கும் தெரிந்ததாகையால், மதுவிலக்குப் பிரசாரகர்களை எதற்காக நியமிக்கவேண்டும்?" என்று சிலர் கேட்கிறார்கள். அடிமைத் தனத்தைக் காட்டிலும் கொடிய நரக வாழ்க்கை வேறு எதுவுமில்லை என்பதை அறியாதார் யாராவது உண்டா? அப்படியிருந்தும் அடிமைத் தனத்தை ஒழித்துச் சுதந்திரம் பெறுவதற்காகக் காங்கிரஸ் மகாசபை பல வருஷங்கள் வரையில் பிரசாரம் செய்ய வேண்டியிருந்தது அல்லவா?

## ஆனால் ஒரு எச்சரிக்கை!

பிரசாரகர்களைப் பொறுக்கும் விஷயத்தில் சர்க்கார் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மதுவிலக்கு இயக்கத்திலும் மற்றும் காங்கிரஸ் திட்டங்களிலும் நம்பிக்கையில்லாத நபர்களைப் பிரசாரகர்களாக நியமித்தால், தலைவலி போய்த் திருகுவலி வந்த கதையாக முடியும். உதாரணமாகப் பாருங்கள். கோயில்களின் நிர்வாகத்தைச் சர்க்கார் ஏற்றுக் கொண்டு, கோயில் காரியங்களை நடத்த நிர்வாக அதிகாரிகளை நியமித்திருக்கிறார்கள். அந்த நிர்வாக அதிகாரிகளின் பலர் "சாமியாவது? பூதமாவது?" என்று கேட்கும் நாஸ்திகர்கள் என்று புகார் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட ஆசாமிகளை ஆலய வழிபாடுகளை நடத்தும் நிர்வாக அதிகாரிகளாக நியமிப்பது பக்தர்களுக்கு மனத்துன்பம் அளிக்கக் கூடிய காரியந்தான். எனினும், இதனாலே கூட அவ்வளவு பெருந்தீமை விளைந்து விடாது. நாஸ்திக அதிகாரிகளின் நாஸ்திகப் பேச்சுக்களையும் அர்ச்சனையாகக் கொள்ளக் கூடிய கருணை உடையவர் அல்லவா கடவுள்?

ஆனால், மதுவிலக்கு விஷயம் முற்றிலும் வேறாகும். மதுவிலக்கில் நம்பிக்கையில்லாதவர்களை மதுவிலக்குப் பிரசாரகர்களாக நியமிப்பது பெருந் தீங்காக முடியும். இவர்கள் காங்கிரஸ் சர்க்காரின் சம்பளத்தை வாங்கிக் கொண்டு காங்கிரஸ் தலைவர்களையும் காங்கிரஸ் திட்டங்களையும் குறை கூறிப் பிரசாரம் செய்வார்கள். காசைக் கொடுத்துத் தேளைக் கொட்டிக் கொண்டதாகும். ஆகையால் மதுவிலக்குப் பிரசாரகர்களைப் பொறுக்கி நியமிக்

கும் விஷயத்தில் காங்கிரஸ் மந்திரிகள் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.

## ‘ குறைத்துக் கொடுங்கள் ’

விலைவாசிகள் மணிக்கு மணி விஷத்தைப்போல் ஏறி வருகிறது. எனவே, ‘சம்பளம் போதவில்லை’ என்ற கூக்குரலும் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இத்தகைய நிலைமையில், “எங்களுக்கு இவ்வளவு அதிக சம்பளம் வேண்டாம். கொஞ்சம் குறைத்துக் கொடுங்கள்” என்று யாராவது சொல்வார்களா? ஆனால் இந்திய சர்க்காரைச் சேர்ந்த உயர்தர அதிகாரிகள் அவ்விதம் தங்களுடைய சம்பளத் தொகைகளை வலுவில் குறைத்துக் கொள்ள முன் வந்து எல்லோரையும் ஆச்சரியத்தில் மூழ்க வைத்திருக்கிறார்கள்.

ஏற்கெனவே, கவர்னர் ஜெனரல் ராஜாஜி நமது நாட்டின் செல்வ நிலையை நன்குணர்ந்து தமது சம்பளத்தில் பெரும் பகுதியைக் குறைத்துக் கொண்டதை யாரும் மறந்திருக்க முடியாது. அந்த முன்னுதாரணத்தைப் பின்பற்றி இப்போது பல உயர்தர அதிகாரிகளும் தங்களுடைய சம்பளத்தில் சுமார் பத்தில் ஒரு மடங்குத் தொகையைக் குறைத்துக்கொள்ள முன் வந்திருக்கிறார்கள். ஐயாயிரம் ரூபாய் சம்பளம் பெறுவதற்கு உரிமையுள்ள ஆடிட்டர் ஜெனரல் தமக்கு நாலாயிரம் ரூபாய்க்குமேல் வேண்டாம் என்று இந்திய சர்க்காருக்கு அறிவித்திருக்கிறார். இந்திய சர்க்கார் மந்திரிகளும் தங்களுடைய சம்பளத்தில் பதினைந்து சத விகிதம் குறைத்துக்கொள்ள உத்தேசித்திருக்கிறார்கள். இவற்றைத் தவிர இருநூற்றைம்பது ரூபாய்க்குமேல் சம்பளம் வாங்குவோர் மாதா மாதம் குறிப்பிட்ட தொகையைக் கட்டாயமாகச் சேமித்து வைக்க வேண்டும் என்றும் இந்திய சர்க்கார் நிர்ணயித்திருக்கிறார்கள். சிக்கன முறையை யொட்டி வாயளவில் இடைவிடாது செய்து வந்த பிரசாரத்தைக் காட்டிலும் சர்க்கார் அதிகாரிகளின் மேற்படி செய்கை எத்தனையோ மடங்கு அதிக பலனைக் கொடுக்கும்.

## உலகம் சிரித்தது !

முஸ்லிம் நாடுகள் எல்லாம் சேர்ந்த “இஸ்லாமிஸ்தான”த்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்றும், எவ்விஷயத்திலும் முஸ்லிம் நாடுகள் ஏகோபித்து நிற்க வேண்டும் என்றும் ஜபருல்லாகான் கோஷ்டியினர் கூறிவருகிறார்கள். ஆனால் ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபையில் இந்தியாவைத் தேர்ந்தெடுக்கக் கூடாது என்று அவர் கூக்குரலிட்டபோது, முஸ்லிம்கள் அடங்கிய அரபு நாடுகள் ஜபருல்லாவுக்குக் குல்லாப் போட்டுவிட்டு இந்தியாவுக்குச் சாதகமாகவே வோட்டுக் கொடுத்தன. பாகிஸ்தானின் போக்கு நேர்மையற்றது என்பதை அரபு நாடுகள் அவ்வாறு உலகம் அறிய இடித்துக் காட்டியது ஜபருல்லாகானுக்குப் பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தது. அவரது துரதிர்ஷ்டம் அத்துடன் நிற்கவில்லை. சர்வதேச மேடையில் உலக நாடுகளின் பிரதிநிதிகள் ஏளனம் செய்து நகைக்கும்படியான ஒரு சம்பவத்தில் ஜபருல்லாகான் தமது அறியாமை காரணமாக சிக்கிக் கொண்டார். எரிட்ரியா பிரதேசம் தங்களுடைய நாட்டுடன் இணைக்கப்பட வேண்டும் என்று எதியோபியப் பிரதிநிதிகள் ஐக்கிய நாடுகள் சபையில் வாதாடினார்கள். உலகத்திலுள்ள முஸ்லிம்கள் எல்லோருக்கும் தாம்தான் தர்மகர்த்தா என்று கருதும் ஜபருல்லாகான் உடனே வெகு கோபத்துடன் எழுந்தார். “எரிட்ரியாவிலுள்ள ஜனங்களில் பெரும்பாலோரும் முஸ்லிம்கள் ஆவர். எதியோபியா கிறிஸ்துவர் தேசமாகும். ஆகையால், எரிட்ரியா முஸ்லிம்களை எதியோபியாவின் ஆதிக்கத்தில் விடுவது அக்கிரமம்” என்று ஜபருல்லா தமது பேச்சில் வகுப்பு வாத விஷத்தைப் புகுத்தினார். ஆனால், அவரது வகுப்பு வெறிக்கு எதியோபியப் பிரதிநிதி சரியான சூடு கொடுத்து விட்டார்.

“இங்கு எங்கள் பிரதிநிதி கோஷ்டியில் ஐந்து முஸ்லிம்கள் இருக்கிறார்கள். எங்கள் தேசத்தில் முஸ்லிம்களில் பலர் ஹைகோர்ட் நீதிபதிகளாகவும் மந்திரிகளாகவும் இருக்கிறார்கள். ஜபருல்லாகான் குரானை வாசித்திருந்தால் இவ்வாறு பேசியிருக்கமாட்டார். ஒரு காலத்தில் முஸ்லிம்கள் துரத்தியடிக்கப்பட்ட போது அவர்களுக்கு எதியோபியர்கள் அடைக்கலம் அளித்தார்கள் என்று முகம்மது நபி அவர்களே எதியோபியர்களைப் பாராட்டியிருக்கிறார்கள். ‘நீங்கள் மலைபோல் தங்கக் குவியலைக் கொடுத்தாலும் எங்களிடம் தஞ்சம் புகுந்தவர்களை நாங்கள் கைவிட மாட்டோம்’ என்று எதியோபியர்கள் கூறியதாகவும் குரானில் குறிப்பிடப் பட்டிருக்கிறது” என்று எதியோபியப் பிரதிநிதி வெளுத்து வாங்கி விட்டார்! முஸ்லிம்கள் எல்லோருக்கும் சட்டாம் பிள்ளையாக இருக்க விரும்பும் ஜபருல்லாகான் இஸ்லாம் வேதமான குரானைச் சரிவர வாசிக்கவில்லை என்பது உலகம் சிரிக்க வெளியாகியதால், ஜபருல்லா பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு மௌனமாகத் தமது இடத்தில் போய் உட்கார்ந்தார்!

நிகழ்ச்சிச் சித்திரம் - சாஸ்திரி




அஸ்ஸாம் எல்லைக்குள் திருட்டுத் தனமாக நுழைந்துள்ள பாகிஸ்தானியர்களைக் கவனித்துக் கொள்வதாக இந்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ கோபாலசாமி ஐயங்கார் உறுதி கூறியுள்ளார்.

மின்சார வேலைகளை சர்க்கார் நிர்வாகத்தில் எடுத்துக் கொள்வதற்காக கனம் மந்திரி பக்தவத்ஸலம் ஒரு மசோதா கொண்டுவர உத்தேசித்திருப்பது மின்சாரக் கம்பெனிகளுக்குத் திகில் உண்டு பண்ணியிருக்கிறது.

சர்க்கார் மசோதா

மின்சாரக் கம்பெனிகள்



இந்திய சர்க்கார் மந்திரி கனம் முகர்ஜி
எவ்வளவோ நல்ல வார்த்தை சொல்லியும் கூடக்
கைத்தொழில் முதலாளிகள் தங்களுடைய
பிடிவாதத்தைக் கைவிடவில்லை.
கைத்தொழில் முதலாளி




நன்னடத்தை
உத்தரவாதம்
உறுதி மொழி




விவசாயப் பிரச்சினையைத் தீர்க்க யோசனை
கூறுவதற்காக நியமிக்கப்பட்ட விவசாயக்
கமிட்டி அங்கத்தினர்களின் தகராறைத்
தீர்த்து வைக்க வேண்டிய பொறுப்பு
விவசாய மந்திரி சபைக்கு ஏற்பட்டிருக்-
கிறது.
அறிக்கை
ஜே.ஸி.குமரப்பா




செந்தார்ரெட்டியார்






புதை புண்ட கோரிக்கையை
மறுபடியும் பிழைக்க
வைப்பதற்கு மாஸ்டர்
தாராசிங் முயற்சிக்-
கிறார்!
சீக்கிஸ்-
தான்

# வருகிறார் வெற்றிமாலையுடன்!

குளத்தைப் பார்த்தவன் முதல் முறையாக மகா சமுத்திரத்தைக் கண்டுவிட்டால் எவ்வளவு ஆச்சரியத்தில் மூழ்குவான்?

மணல்க் குன்றுகளை மாத்திரமே பார்த்தவன் முதல் தடவையாக மகா மேருவைக் காண நேர்ந்தால் எப்படி பிரமித்துப் போவான்?

கால்வாயைத் தவிர வேறெதையும் கண்டறியாதவன் கங்கையின் கம்பீரமான பிரவாகத்தைப் பார்க்கும் பாக்கியத்தைப் பெற்றால் எவ்வளவு பரவசம் அடைவான்?

இருளில் தட்டுத் தடுமாறியவன் பிரகாசத்தைக் கண்டால் எவ்வளவு மகிழ்ச்சி அடைவான்?

அது போலவே கன்னி மேயோவினால் சித்திரிக்கப்பட்ட இந்தியாவைக் கண்ட அமெரிக்கர்கள், பண்டித ஜவாஹர்லால் நேருவிடம் முற்றிலும் வேறு விதமான இந்தியாவைக் கண்டபோது ஆச்சரியத்தில் மூழ்கினர், ஆனந்தக் கண்ணீர் வடித்தனர்.

ஆதி சங்கரர், கௌதம புத்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், அமர கவி தாகூர், அஹிம்சா மூர்த்தி காந்தி முதலிய மகான்களைப் பெற்றெடுத்த பாரத நாட்டின் மகோன்னத நிலையை, பண்பாட்டை, சர்வதேச சகோதரத்வக் கொள்கையை ஜவாஹர்லால்ஜியின் ஒளி வீசும் கண்களில், பேச்சுக்களில், நடையுடை பாவனைகளில் அமெரிக்க மக்கள் கண்டனர்.

அமெரிக்காவிலுள்ள மாபெரும் நகரங்கள் தமது அருமைத் தலைவருக்கு மகத்தான வரவேற்பு அளித்துப் பெருமையைத் தேடிக் கொண்டன.

அமெரிக்க சரித்திரத்திலேயே இதற்கு முன் எந்தத் தலைவருக்கும் அமெரிக்கா ஜனங்கள் இவ்வளவு மரியாதை காட்டியதில்லை என்று அமெரிக்கச் செய்திகள் கூறுகின்றன.

ஆயுத பலத்திலும் செல்வச் செழுமையிலும் உலக நாடுகளுக்கே தலைமை வகிக்கும் அமெரிக்கா, ஆயுத பலமற்ற, வறுமையால் வாடும் இந்தியாவின் தலைவருக்கு ராஜோபசார வரவேற்பு அளித்ததன் காரணம் என்ன?

சத்திய நெறியிலும், ஆத்ம பலத்திலும் இந்தியா ஈடு இணையற்று விளங்குவதை அமெரிக்க ஜனங்கள் உணர்ந்து கொண்டிருப்பதே அதற்குக் காரணம்.

* * *

“இந்தியாவின் பிரதம மந்திரி என்ற முறையில் மாத்திரமல்ல, கோடிக் கணக்கான ஜனங்களின் ஒப்பற்ற தலைவர் என்ற முறையிலும் உங்களை வரவேற்கிறேன். அமெரிக்கர்கள் என்றும் இந்தியர்களின் உண்மையான நண்பர்களாகவே இருந்து வருவார்கள்” என்று கூறி அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் பண்டித ஜவாஹர்லால் நேருவை வரவேற்றார்.

“நீங்கள் இந்தியாவுக்கு மாத்திரம் தலைவர் அல்ல, உலகம் முழுவதற்கும் தலைவர். உலகத்தில் சமாதானமும் சுபிட்சமும் ஏற்படுவதற்கு மானிடவர்க்கம் தங்களைப் போன்ற மகா மேதாவிகளான தலைவர்களின் உதவியையே நாடி நிற்கிறது” என்று ஸான் பிரான்ஸிஸ்கோ தலைவர் ஜவாஹர்லால்ஜியைப் பாராட்டினார்.

“மகாத்மா காந்திக்கு அடுத்தபடியாக உலகத்தின் நன்மதிப்பைப் பெற்றுள்ள இந்தியாவின் பிரதம மந்திரியும், முப்பத்தைந்து கோடி மக்களின் தலைவருமான ஜவாஹர்லால்ஜியை வரவேற்கிறோம்” என்று நியூயார்க் நகரிலுள்ள எண்பது லட்சம் ஜனங்களின் சார்பில் நியூயார்க் மேயர் மரியாதை செய்து உபசரித்தார்.

அமெரிக்க சர்க்கார் தலைவர்கள், ராஜதந்திரிகள், முதலாளிகள், கைத்தொழில் நிபுணர்கள், சர்வகலா சாலைகள், கவிகள், நூலாசிரியர்கள், பத்திரிகாசிரியர்கள், விவசாயிகள், மாணவர்கள், குழந்தைகள் முதலிய

சகலரும் போட்டி போட்டுக் கொண்டு இந்தியாவின் மாபெரும் தலைவருக்கு மரியாதை செலுத்தினார்கள்.

அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்களின் ஸ்தாபனமும், உலகத்திலிருந்து அநீதியான நிறவெறியை ஒழிப்பதையும் நமது கடமைகளில் ஒன்றாகக் கருதும் ஜவாஹர்லால்ஜியை வரவேற்றுத் தங்கப் பதக்கம் பரிசளித்தது.

"அமெரிக்க நீக்ரோக்கள் உங்களுக்குத் தலை வணங்குகிறார்கள். தாங்கள் ஜீவகாருண்யமும் நீதிநெறியும் உள்ள ஒரு ராஜதந்திரி. உலகத்தில் சுதந்திரத்துக்காகவும், சமத்துவ உரிமைகளுக்காகவும் பாடுபடும் எல்லா ஜனங்களுக்கும் உங்களுடைய ஆதரவு உற்சாகத்தை அளிக்கிறது" என்று நீக்ரோக்களின் தலைவர் பண்டித ஜவாஹர்லால் நேருவை உணர்ச்சி ததும்பப் பாராட்டிப் பேசினார்.

* * *

அமெரிக்காவின் மனப்பூர்வமான உபசாரங்களுக்குப் பதில் அளித்த நமது தலைவர், அமெரிக்க சர்க்காருக்கும் ஜனங்களுக்கும் நன்றி செலுத்தியதுடன் நின்று விடவில்லை; உலகப் பிரச்னைகளை யொட்டித் நமது கருத்துக்களையும் இந்தியாவின் நிலைமையையும் பட்டவர்த்தனமாக எடுத்துக் கூறினார்.

"எங்களிடம் அணுகுண்டு இராததற்காக நாங்கள் மிகவும் மகிழ்ச்சியடைகிறோம்" என்று ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டார்.

அணுகுண்டு உற்பத்தியில் அமெரிக்கா, ருஷ்யா, பிரிட்டன் முதலிய நாடுகளிடையே போட்டா போட்டி ஏற்பட்டிருக்கும் இந்தச் சமயத்திலே பாரத நாட்டின் பிரதம மந்திரி அவ்வாறு கூறி வல்லரசுகளின் விபரீதமான போக்கை மிகவும் கண்ணியமான முறையில் கண்டித்தார்.

ஆசியாவின் அதி முக்கியமான பிரச்னை அன்னியரின் ஆதிக்கம்தான் என்றும், ஆசிய நாடுகள் அன்னியரின் காலனிகளாக இருந்து வரும் அநீதி ஒழிந்தாலன்றி உலக அமைதி ஏற்படுவது முடியாத காரியம் என்றும் இடித்துக் காட்டி, ஏகாதிபத்திய வெறி பிடித்து அலையும் நாடுகளைக் கடுமையாக எச்சரித்தார்.

அமெரிக்காவின் உதவியை இந்தியா நாடுகிறது என்றும் ஜவாஹர்லால்ஜி ஒளிவு மறைவின்றிக் கூறினார்.

இந்தியாவுக்கு உடனடியாக வேண்டியது கோதுமை போன்ற உணவுப் பொருள்கள்தான். அவை அமெரிக்காவில் தேவைக்கு அதிகமாக இருப்பதால், அமெரிக்கா அவற்றை இந்தியாவுக்கு அனுப்பி உதவி புரியலாம்.

நமது நாட்டில் பல மகத்தான அபிவிருத்தித் திட்டங்கள் உருவாகி வருகின்றன. அவைகளுக்கு இன்றியமையாத யந்திர சாதனங்களையும் யந்திர நிபுணர்களையும் அமெரிக்கா அனுப்புவதன் மூலம் விவசாயம், கைத்தொழில் போன்ற துறைகளில் இந்தியா முன்னேற்றம் அடைவதற்கு வழி ஏற்படும்.

அடுத்தபடியாக இந்தியாவிலுள்ள தொழில் துறைகளில் அமெரிக்க முதலாளிகள் மூலதனம் போடுவதன் மூலம் இந்தியாவுக்கு உதவி அளிக்க முடியும். அதனால் இந்தியாவுக்கும் நன்மை ஏற்படும்; அமெரிக்க முதலாளிகளுக்கும் லாபம் உண்டு.

இவ் விவரங்களை யெல்லாம் ஜவாஹர்லால்ஜி தெளிவாக எடுத்துக் கூறி அமெரிக்காவின் நட்பையும் நன்மதிப்பையும் பெற்றார்.

* * *

சின்னிமேயோ முதல் ஜபருல்லாகான் வரையில் எத்தனையோ விஷமிகள் செய்து வந்த பொய்ப் பிரசாரம் காரணமாக இந்தியாவைப் பற்றி அமெரிக்கர்களிடையே அறியாமையும் தப்பெண்ணமும் நிலவி வந்தன.

ஆனால், இந்தியாவின் முடிசூடா மன்னர் அமெரிக்காவுக்கு விஜயம் செய்ததன் பலனாக அவை அகன்று விட்டன என்பதில் சந்தேகமில்லை.

அமெரிக்காவில் உள்ள ஆகாயமளாவும் கட்டிடங்களைப் போல இந்தியாவின் செல்வாக்கும் அந்தத் தேசத்தில் வானளாவ உயர்ந்திருக்கிறது!

இந்தியாவின் கொள்கைகளையும் கோரிக்கைகளையும் அமெரிக்கர்கள் நன்கு அறிந்து கொண்டிருக்கிறார்கள்.

எனவே, இரு நாடுகளும் ஒத்துழைப்பதன் மூலம் இந்தியாவின் பிரச்னைகள் மாத்திரமல்ல, அமெரிக்காவின் பிரச்னைகள் மாத்திரமல்ல, உலகத்தின் பிரச்னைகள் எல்லாம் திருப்திகரமாகத் தீரலாம் என்ற நம்பிக்கை அமெரிக்கத் தலைவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

பண்டித ஜவாஹர்லால் நேருவின் ஷஷ்டியப்த பூர்த்தி வைபவம் பாரத நாடெங்கும் கொண்டாடப்படும் இந்தச் சமயத்தில், ஜவஹர்லால்ஜி இவ் விஜயத்தைப் பூர்த்தி செய்து கொண்டு வெற்றி மாலையுடன் திரும்பி வருவது முப்பத்தைந்துகோடி மக்களுக்கும் மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 23. கராச்சி விசாரணை

மௌலானா முகம்மதலி கைதியானதைப் பற்றி மகாத்மா எழுதிய கட்டுரையில், "அலி சகோதரர்கள் இணை பிரியாத இரட்டையர்கள். அவர்களைப் பிரித்து வைக்க முடியாது. ஆகையால் முகம்மதலியைக் கைது செய்தவர்கள் ஷவுகத் அலியையும் கைது செய்தே தீர்வார்கள் !" என்று குறிப்பிட்டிருந்தார். இது உண்மை என்பது இரண்டு நாளைக்குள் தெரியவந்தது.

மௌலானா முகம்மதலியை விசாகப்பட்டினம் மாஜிஸ்ட்ரேட் கைது செய்தது ஒரு காரணார்த்தமாகத்தான். 17உ அன்று மேற்படி 107, 108 பிரிவு ஜாமீன் வழக்குகள் வாபஸ் வாங்கப்பட்டன. அந்த க்ஷணமே கராச்சியிலிருந்து வந்திருந்த வாரண்டின்படி மௌலானா முகம்மதலியை மீண்டும் கைது செய்து கராச்சிக்குக் கொண்டு போனார்கள்.

அதே தேதிகளில் இந்தியாவின் பல பகுதிகளிலும் இருந்த மௌலானா ஷவுகத் அலி, டாக்டர் ஸைபுதீன் கிச்லூ, பீர் குலாம் முஜாதித், மௌலானா நிஸார் அமத், மௌலானா ஹுஸேன் அமத், ஜகத் குரு சாரதா பீட சங்கராச்சாரியார் ஆகியவர்களையும் கைது செய்தார்கள். எல்லாரையும் கராச்சிக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

இப்படி அவர்களை யெல்லாம் கராச்சிக்குக் கொண்டுபோனதின் காரணம் என்னவென்றால், ஜூலை மாதம் 8உ கராச்சியில் அகில இந்திய கிலாபத் மகாநாடு நடைபெற்றது. அந்த மகாநாட்டுக்கு மௌலானா முகம்மதலி தலைமை வகித்தார். இந்த மகாநாட்டில், அதுவரை காங்கிரஸில் செய்திருந்த தீர்மானங்களை யெல்லாம் விடக் கடுமையான தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

"கிலாபத் விஷயமாக பிரிட்டிஷ் சர்க்கார் நீதி வழங்காதபடியால் இனிமேல் மதப் பற்றுள்ள எந்த முஸ்லிமும் சைன்யத்தில் சேவை செய்வதும், சைன்யத்துக்கு ஆள் சேர்ப்பதற்கு உதவி செய்வதும் மார்க்க விரோதமாகும்" என்பது அந்தத் தீர்மானத்தின் கருத்து.

கல்கத்தாவிலும் நாகபுரியிலும் நிறைவேறிய ஒத்துழையாமைத் தீர்மானத்தில் சைன்ய சேவையைப் பற்றிக் குறிப்பிடவில்லை. சைன்யத்தில் உள்ளவர்களை வேலையை விடும்படி செய்வதற்குக் காலம் வரவில்லை என்று கருதப்பட்டது. அது மட்டுமல்ல. மற்ற ஒத்துழையாமைத் திட்டங்களை யெல்லாம் பிரிட்டிஷ் சர்க்கார் ஒருவேளை அலட்சியமாகக் கருதி விட்டு வைக்கலாம். ஆனால் சைன்ய சேவையை விடவேண்டும் என்று சொன்னால் உடனே மிகக் கடுமையான அடக்குமுறை தொடங்குவார்கள். அதனுடைய பலாபலன்கள் இப்படியிருக்குமென்று ஊகிப்பது கடினம். ஆகையால் அதைக் கடைசித் திட்டமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று மகாத்மாவும் மற்றத் தலைவர்களும் கருதினார்கள்.

ஆனால் முஸ்லிம் தலைவர்கள் அவ்வளவு தூரம் பொறுமையைக் கடைப்பிடிக்கத் தயாராயில்லை. "முஸ்லிம்கள் இனிமேல் பிரிட்டிஷ் சைன்யத்தில் சேர்ந்து சேவை செய்வது பாவம்" என்று கராச்சியில் தீர்மானம் நிறைவேற்றினார்கள். அத்துடன் நின்று விடவில்லை. அச்சமயத்தில் அங்கோராவில் முஸ்தபா கமால் பாட்சாவின் தலைமையில் புதிய துருக்கி அரசாங்கம் ஏற்பட்டிருந்தது. அந்த அங்கோரா அரசாங்கத்துடன் பிரிட்டிஷார் போர் தொடுத்தால், "இந்திய முஸ்லிம்கள் உடனே சட்டமறுப்பு இயக்கம் தொடங்கி இந்தியாவில் பூரண சுதந்திரத்தை ஸ்தாபிக்க வேண்டும்" என்றும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

இந்தத் தீர்மானங்கள் நிறைவேறிய கராச்சி மகாநாட்டுக்கு மௌலானா முகம்மதலி தலைமை வகித்தார். தமது தலைமையுரையில் மேலேகூறிய கருத்துக்களை



கண்ணாடிக்காரர் :— நேற்று நீங்கள் சபாவிலே நடந்த கச்சேரிக்குப் போய் விட்டு வந்தீர்கள் போலிருக்கிறது!

மற்றவர் :—எப்படி அதைக் கண்டு பிடித்தீர்கள்?

கண்ணாடிக்காரர் :—காலிலே புத்தப் புதிய பூட்ஸ் போட்டுக் கொண்டிருக்கிறீர்களே!

---

அவர் வெளியிட்டார். மௌலானா ஷவுகத் அலி முதலியவர்கள் மேற்படி தீர்மானங்களை ஆதரித்துப் பேசினார்கள்.

இவ்விதம் இராஜத்துவேஷப் பிரசாரம் செய்த காரணத்துக்காகவே மேற் கூறிய ஏழு தலைவர்களும் பல இடங்களில் கைது செய்யப்பட்டுக் கராச்சியில் விசாரணைக்காகக் கொண்டு போகப்பட்டனர்.

• • •

காந்திஜி வால்ட்டேரில் மௌலானா முகம்மதலியைப் பிரிந்து சென்னைக்கு வந்து சேர்ந்தார். மௌலானாவின் மனைவியரான பீகம் முகம்மதலியும் மகாத்மாவுடன் சென்னைக்கு வந்தார். அலி சகோதரர்கள் மிக்க மத வைராக்யம் உள்ளவர்கள். ஆகவே பீகம் முகம்மதலி இஸ்லாமிய வழக்கப்படி கோஷா முறையை அனுஷ்டித்தார். முகமூடி இல்லாமல் வெளியில் புறப்படுவதில்லை. அப்படிப்பட்ட கோஷாப் பெண்மணி தமது கணவர் தொடங்கிய வேலையைத் தாம் தொடர்ந்து நடத்த வேண்டும் என்று கருதி மகாத்மாவுடன் சுற்றுப் பிரயாணம் செய்யலானார்.

சென்னை வந்து சேர்ந்ததும் காந்திஜிக்கு மௌலானா முகம்மதலி கராச்சித் தீர்மானம் காரணமாகக் கைதியானார் என்னும் செய்தி கிடைத்தது. அன்று மாலையில் சென்னைக் கடற் கரையில் மாபெரும் பொதுக் கூட்டம். ஜல சமுத்திரத்தின் கரையில் ஜன சமுத்திரம் திரண்டிருந்தது. மகாத்மாவும் பீகம் முகம்மதலியும் கூட்டத்துக்கு வந்தார்கள். மக்களின் ஆவேசத்தையும் பரபரப்பையும் சொல்லி முடியாது. ஆரவாரம் கொஞ்சம் அடங்கிய பிறகு மகாத்மா காந்தி பேசினார். பேச்சின் ஒவ்வொரு வார்த்தையும் தீப்பொறியைப் போல் சுடர் விட்டது. "மௌலானா முகம்மதலியை எந்தக் குற்றத்துக்காகக் கைது செய்தார்களோ அதே குற்றத்தை நான் இப்போது செய்யப் போகிறேன்!" என்று காந்தி மகாத்மா கூறியதும் அங்கே திரண்டிருந்த லட்சக் கணக்கான மக்களுக்கும் ரோமாஞ்சலி உண்டாயிற்று.

கராச்சியில் மௌலானா முகம்மது அலி என்ன பிரசங்கம் செய்தாரோ, அதையே மகாத்மா காந்தி வார்த்தைக்கு வார்த்தை சரியாக அந்த மாபெருங் கூட்டத்தில் சொன்னார். கராச்சி தீர்மானங்களின் வாசகத்தையும் எடுத்துக் கூறினார்.

"மௌலானா முகம்மதலி செய்த குற்றத்தை நானும் செய்து விட்டேன். என்னையும் சர்க்கார் கைது செய்யட்டும்!" என்றார் காந்தி மகான்.

பொது மக்கள், "இதுவல்லவா சிநேகம்? இதுவல்லவா சகோதர பாவம்!" என்று எண்ணி வியந்தார்கள். தம்முடைய அருமைச் சகோதரரும் சகாவுமான முகம்மது அலியை மகாத்மா காந்தி ஆதரித்து நின்ற மேன்மைக் குணம் மக்களைப் பரவசப்படுத்தியது.

பிறகு சென்னைக் கடற்கரையில் தொண்டர்கள் கொண்டு வந்து குவித்திருந்த மலை போன்ற விதேசித் துணிகளுக்கு மகாத்மா தீ மூட்டினார். கூட்டத்திலிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்கள் தங்கள் மேலிருந்த விதேசித் துணிகளைக் கொண்டு வந்து தீயிலே போட்டார்கள். அத்தனை பெரிய துணிக் குவியலும் அரை மணி நேரத்தில் எரிந்து சாம்பராயிற்று.

சென்னைக் கடற்கரையில் மகாத்மா மேற் கண்டவாறு பேசிய செய்தி நாடெங்கும் பரவியது. நாட்டின் நாலா பக்கங்களிலும் இருந்த தேசத் தலைவர்கள் "மௌலானா முகம்மதலி செய்த குற்றத்தை நாங்களும் செய்தே தீருவோம்!" என்று சொன்னார்கள்.

ஆகவே காந்திஜியும் மற்றும் ஐம்பது பிரபல காங்கிரஸ் தலைவர்களும் கூட்டுக் கையெழுத்துப் போட்டு அக்டோபர் மீ 4௳ ஒரு விக்ஞாபனத்தை வெளியிட்டார்கள். அக்டோபர் மீ 6௳ "யங் இந்தியா"வில் மேற்படி விக்ஞாபனமும் கையெழுத்துக்களும் பிரசுரிக்கப்பட்டன.

"அலி சகோதரர்களும் மற்றவர்களும் எதற்காகக் கைது செய்யப்பட்டார்கள் என்பதைப் பம்பாய் சர்க்கார் 1921-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 15-ம் தேதி வெளியிட்டுள்ள அறிக்கையில் விளக்கி யிருக்கிறார்கள். மேற்படியார்கள் கைது செய்யப்பட்டதை உத்தேசித்து, கீழே கையொப்ப மிட்டிருக்கும் நாங்கள் தனிப்பட்ட முறையில் தெரிவிக்க விரும்புவதாவது:

ராணுவத்திலோ, சிவில் நிர்வாகத்திலோ கலந்து ஜனங்கள் சர்க்காருக்குத் தொண்டு செய்யலாமா, கூடாதா என்பதைப் பற்றித் தாராளமாக அபிப்பிராயம் சொல்ல ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

அரசியலிலும், பொருளாதாரத் துறையிலும், தார்மிகத் துறையிலும் இந்தியா சீர் குலைந்திருப்பதற்குத் தற்போதுள்ள இந்திய சர்க்காரே காரணமாகும். மக்களுடைய தேசீய அபிலாஷைகளை அடக்கி ஒடுக்குவதற்குப் போலீஸையும் ராணுவத்தையும் சர்க்கார் உபயோகித்திருக்கிறது. இதற்கு உதாரணமாக ரௌலட் சட்டக் கிளர்ச்சியைச் சொல்லலாம். இந்தியாவுக்கு ஒரு தீமையும் செய்தறியாத அராபியர்கள், எகிப்தியர்கள், துருக்கியர்கள் முதலியோருடைய சுதந்திரத்தை நசுக்குவதற்காக இந்திய ராணுவத்தையும் இந்திய சர்க்கார் உபயோகித்திருக்கிறது.

இத்தகைய சர்க்காரின் சிவில் உத்தியோகஸ்தராகவும் சேனையில் சிப்பாயாகவும் தொண்டு செய்வது தேசீய கௌரவத்திற்கே பங்கம் விளைவிப்பதாகும். ஆகையால், சர்க்காருடனுள்ள தொடர்பை அறவே ஒழித்துவிட்டு, ஜீவனத்திற்கு வேறு ஏதாவது வழியைத் தேடிக்கொள்ள வேண்டியது ஒவ்வொரு இந்திய சிப்பாயினுடையவும் சிவில் உத்தியோகஸ்தருடையவும் கடமை என்று நாங்கள் கருதுகிறோம்.

(ஒப்பம்) எம். கே. காந்தி. அபுல்கலாம் ஆஸாத்: அஜ்மல் கான் (டில்லி): லஜபதி ராய் (லாகூர்): மோதிலால் நேரு (அலஹாபாத்): சரோஜினி நாயுடு (பம்பாய்): அப்பாஸ் தயாப்ஜி: என். ஸி. கேல்கர்; வி ஜெ. படேல்; வல்லபாய் படேல் (அஹமதாபாத்): எம். ஆர். ஜயகர் (பம்பாய்): டி. வி. கோகலே (பூனா): என். ஜி. பேங்கர்: ஜவாஹர்லால் நேரு (அலஹாபாத்): கங்காதர தேஷ்பாண்டே (பெல்காம்): லக்ஷ்மிதாஸ் தேர்ஸி: உமர் சோபானி: ஜம்னாலால் பஜாஜ்: எம். எஸ். ஆனே (அமராதி): எஸ். இ. ஸ்டோக்ஸ், கோட்கார் (ஸிம்லா): எம். ஏ. அன்ஸாரி (டில்லி): கலீக் குஜ்ஜமான் (டில்லி): கே. எம். அப்துல் கபூர் (டில்லி): அப்துல் பாரி (லக்ஷ்மணபுரி): கிருஷ்ணஜி நீலகண்ட் (பெல்காம்): ஸி. ராஜகோபாலாச்சாரி (சென்னை): கொண்ட வெங்கடப்பையா (குண்டூர்): ஜி. ஹரிஸர்வோத்தம ராவ் (குண்டூர்): அனஸூயா ஸாராபாய்: ஜிதேந்திரலால் பானர்ஜி: எம். ஜெ. சித்வாய் (டில்லி): ஷியாம் சுந்தர சக்கரவர்த்தி (கல்கத்தா): ராஜேந்திர பிரசாத் (பாட்னா): ஆஸாத் சோபானி: ஹஸரத் மோஹானி (கான்பூர்): மஹாதேவ் தேஸாய்: பி. எப். பருச்சா: யாகூப் ஹஸன்: பி. என். மூஞ்ஜே: ஜெயராம்தாஸ் தௌலத்ராம்: எம். ஆர். சோல்கர் (நாகபுரி): வி. வி. தம்தாலே: ஏ. ஜெ. சித்திக் காத்ரி (பம்பாய்): கூடார் ராமச்சந்திர ராவ் (ஆந்திரா): மியா முகம்மது ஹாஜி ஜான் முகம்மது சோட்டானி.

* * *

மேற்படி விக்ஞாபனத்தில் ஸ்ரீ ஸி. ஆர். தாஸின் கையெழுத்து காணப்படாதது பலருக்கும் வியப்பை அளித்தது. தந்திப் போக்குவரத்தில் ஏற்பட்ட தாமதந்தான் அதற்குக் காரணம் என்று தெரியவந்தது. எனவே, ஸ்ரீ சித்தரஞ்சன் தாஸின் கையெழுத்தும் பிற்பாடு அந்த விக்ஞாபனத்தில் சேர்ந்தது.

அந்தப் புகழ்பெற்ற 1921-ம் வருஷத்தில் காந்தி மகாத்மாவின் முக்கிய துணைவர்களாக விளங்கிய தலைவர்கள் யார் யார் என்பதை மேற்படி விக்ஞாபனத்தின் கீழே வெளியாகியுள்ள கையெழுத்துக்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

* * *

டில்லியில் ஹகீம் அஜ்மல்கான் தலைமையில் கிலாபத் கமிட்டி கூடி சைன்யத்திலிருந்து முஸ்லிம்களை வெளியேறச் சொல்வது முஸ்லிம்களின் மதக் கடமை என்று தீர்மானம் செய்தது.

தேசமெங்கும் ஆயிரக் கணக்கான கூட்டங்களில் பிரசங்கிகள் மௌலானா முகம்மதலியின் கராச்சி பேச்சை யொட்டிப் பேசினார்கள். மேடையிலிருந்து ஒரு பிரமுகர் அந்தப் பேச்சை ஒவ்வொரு வார்த்தையாகப் படிப்பதும் திரளான மக்கள் திருப்பிச் சொல்வதும் சர்வசாதாரணமாக நடக்கலாயிற்று.

இவ்வளவு கிளர்ச்சி தேசத்தில் நடந்து கொண்டிருக்கையில், கராச்சியில் மௌலானா முகம்மதலி மீதும் மற்ற அறுவர் மீதும் விசாரணை நடந்துகொண்டிருந்தது. அலி சகோதரர்களும் மற்ற முஸ்லிம் தலைவர்களும் "எங்கள் மதக் கடமையைச் செய்தோம். சர்க்கார் சட்டம் எப்படியிருந்தாலும் எங்களுக்கு அக்கறையில்லை" என்ற முறையில் கோர்ட்டில் வாக்குமூலம் கொடுத்தார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் இரண்டு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

"கவலை வேண்டாம். அலி சகோதரர்கள் சின்னச் சிறையிலும் நாம் பெரிய சிறையிலும் இருக்கிறோம். இரண்டு சிறைக் கதவுகளையும் உடைத்து விடுதலை செய்யும் சக்தி நம் கையில் இருக்கிறது!" என்று காந்தி மகான் கூறினார்.

# தேவகோட்டையில் ஒரு நாள்

பகீரதன்

"தம்பி! உன் பெயர் என்ன?"

மௌனம்.

"சொல், அப்பா!"

மௌனம்.

"என்ன, பேச மாட்டாயா?"

பையன் தலையை ஆட்டினான்.

"நீ என்ன ஊமையா?" என்று கேட்டேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை; உங்களைப் பார்த்தவுடன் சங்கோசப்படுகிறான். நாலு நாட்கள் பழகினால் எல்லாம் சரியாய்ப் போய்விடும்" என்று பதில் சொன்னார். பையனின் தகப்பனார்.

பத்து வயதுப் பையன், இரண்டாவது பாரம் படிக்கும் மாணவன் இப்படிச் சங்கோசப் பட்டால் என்ன படிப்பு வேண்டிக் கிடக்கிறது என்று மனதில் எண்ணிக் கொண்டே சிநேகிதரைப் பார்த்து ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்து வைத்தேன்.

இது போன்ற சம்பவங்கள் பல வீடுகளில் அடிக்கடி நடந்து கொண்டுதான் இருக்கிறது. வீட்டுக்கு யாராவது விருந்தினரோ நண்பரோ வந்து விட்டால் குழந்தைகளை அவர்களுடன் தாராளமாகப் பேசச் செய்வதற்குப் பெற்றோர்கள் மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கிறது.

இதற்கு நேர் விரோதமாக ஓரிடத்தில் குழந்தைகள் எந்தக் கேள்விகள் கேட்டாலும் 'பளிச், பளிச்' என்று பதில் சொல்லுகிறார்கள். புரியாத விஷயங்களைப் புரிந்து கொள்ளத் துடிக்கிறார்கள். அவர்கள் எல்லாம் பால் மணம் மாறாப் பச்சிளம் பாலர்கள், ஐந்து வயதுக்கு உட்பட்ட குழந்தைகள் என்றால் நம்ப முடியாதுதான். ஆனால் கல்வி மந்திரி கனம் மாதவமேனன் அவர்களுடனும் "கல்கி" ஆசிரியர் அவர்களுடனும் இந்த அற்புதத்தை நேரிலேயே பார்த்த பிறகு நம்பாமல் இருக்க முடியுமா?

சுமார் இரண்டடி உயரமுள்ள மூன்று வயது மதிக்கக் கூடிய குழந்தையைப் பார்த்துக் கல்வி மந்திரி கூப்பிட்டார்.

பையன் சிரித்த முகத்துடன் மந்திரியின் அருகில் வந்து நின்றான்.

"யார் நீ?" என்று கேட்டார் மந்திரி.

"நானே என்னை அறிமுகப் படுத்திக் கொள்ளட்டுமா?" என்றான் பையன்.

"சரி, அறிமுகப்படுத்திக் கொள்!" என்று சொன்னார் கல்வி மந்திரி.

"நான் காசி; அண்ணாமலைச் செட்டியார் மகன்; ஊர் வலையபட்டி" என்று அந்தப் பாலகன் 'பளிச்' என்று பதில் சொன்னான்.

"நான் யார்?" என்று கேட்டார்.

"நீங்களா? மந்திரி!" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே பையன் அவரைப் பிடித்துக் கொண்டான்.

மந்திரியும் அந்தப் பையனைத் தலைக்கு மேலே உயரத் தூக்கித் தன்னுடைய உற்சாகத்தைக் காண்பித்தார்.

மந்திரியுடன் வந்திருந்த ஸ்ரீமதி குட்டியம்மாளு அம்மாள் அங்கே கும்பலாகக் கிடந்த படங்களில் ஒன்றை எடுத்துக் காண்பித்து, "இது யார், தெரிகிறதா?" என்று கேட்டார்.

"பவநகர் மகாராணி. நமது மாகாண கவர்னரின் மனைவி" என்று பையன் கணீரென்று பதில் சொன்னான்.

இன்னொரு பையனைக் கூப்பிட்டு வேறொரு படத்தைக் காண்பித்து, "இது யார்?" என்று கேட்டார் "கல்கி" ஆசிரியர்.

"கவர்னர் ஜெனரல் ராஜாஜி. நமது தேசத்துத் தலைவர்" என்றான்.

"ராஜாஜி என்று எப்படிச் சொன்னாய்?" என்று கேட்டார்.

"கறுப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டிருக்கிறாரே!" என்று சொல்லிவிட்டுப் பையன் 'கலீர்' என்று சிரித்தான்.

இப்படியாக அங்கிருக்கும் எந்தக் குழந்தையைப் பார்த்து எந்தக் கேள்வி கேட்டாலும் 'பட், பட்'டென்று பதில் சொல்லுகிறார்கள்.

இந்தக் கேள்விப் படலம் முடிந்ததும் சிறிது நேரம் கனம் மாதவ மேனன் குழந்தைகளுடன் விளையாடினார். ஒரு குழந்தையின் கையைப் பிடித்து அவர் தும்பி சுற்றினார். மற்றொரு குழந்தையை 'உப்புக் கொட்டு' தூக்குவது போல முதுகில் தூக்கினார். வேறொரு குழந்தையை உயரமான இடத்தில் உட்கார வைத்துக் கீழே குதிக்-

கச் சொல்லிப் பந்து போல் பிடித்தார். தலையை ஆட்டிக் கொண்டு ஏதோ மாதிரி சத்தம் போட்டுக் குழந்தைகளையும் அப்படிச் சத்தம் போடச் செய்தார். ஜெயித்த குழந்தைக்கு ரோஜாப்பூ மாலை சூட்டினார். அதற்குள் எல்லாக் குழந்தைகளும் அவரைச் சுற்றிக்கொண்டு, "என்னைத் தூக்கிச் சுத்துங்கோ! என்னைத் தூக்கிப் பிடியுங்கோ!" என்று கனம் மந்திரியுடன் விளையாடுவதற்குப் போட்டி போட ஆரம்பித்து விட்டன.

விளையாட்டு முடிந்த பிறகு குழந்தைகள் எல்லாம் வரிசையாக நின்று கொண்டு "அச்சமில்லை! அச்சமில்லை!" என்ற பாரதியின் பாட்டைப் பயமில்லாமல் பாடிக் காண்பித்தனர். பெண் குழந்தைகள் கம்ப ராமாயணப் பாடலையும் பாரதியார் பாடலையும் பாடிக் கொண்டே கும்மி அடித்தனர்; கோலாட்டம் போட்டனர்.

இந்த ஆடல் பாடல் கேளிக்கை முடிந்த பிறகு அந்தச் சிறுவர்களில் ஒருவனைக் கூப்பிட்டு, "உனக்குத் திருக்குறள் தெரியுமா?" என்று கேட்டார் ஒரு டாக்டர்.

"ஓ, தெரியுமே! இதோ!" என்று சொல்லி ஒரு குறளைச் சொன்னான் பையன்.

"கம்ப ராமாயணம் தெரியுமா?" என்று வேறொரு பையனைப் பார்த்துக் கேட்டார் ஒரு பிரமுகர்.

"இதோ சொல்கிறேன்" என்று கம்ப ராமாயணப் பாடல் ஒன்றை ராகத்தோடு பாடிக் காண்பித்தான் அந்தப் பையன்.

இது போல் கவிதை, கணிதம், சரித்திரம், பூகோளம், விஞ்ஞானம் போன்ற எல்லா விஷயங்களிலும் அங்குள்ள குழந்தைகள் கெட்டிக்காரர்களாக இருக்கிறார்கள்.

அவர்களுடைய கெட்டிக்காரத்தனத்தை எண்ணி நான் வியந்து கொண்டிருந்தபோது, "பாண்டியா!" என்று யாரையோ கூப்பிட்டார் ஒருவர்.

மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு ஆஜானுபாகுவாக ஒருவர் வந்து நிற்கப் போகிறார் என்று நான் சுற்று முற்றும் பார்த்தேன். "ஏன்!" என்று கேட்டுக் கொண்டு ஒரு சிறுவன் வந்து நின்றான்.

மூவாயிரம் வருஷத்துக்கு முந்திய பழைய காவியமாகிய முத்தொள்ளாயிரத்திலிருந்து ஒரு பாடலையும், கம்ப ராமாயணத்திலிருந்து ஒரு பாடலையும் அந்தச் சிறுவன் பாவத்துடன் உணர்ச்சி ததும்பப் பாடிக் கம்பீரமாகப் பேசி விளக்கமும் சொன்னவுடன், "ஆகா! என்ன அருமை! இவன் வீரபாண்டியன்தான்!" என்று சொல்லி நாங்கள் எல்லோரும் வியந்து பாராட்டினோம்.

கடைசியில் குழந்தைகள் எல்லாம் தமிழ் நாட்டு வாழ்த்துப் பாடலான வாழிய செந்தமிழைப் பாடி 'ஜெய ஹிந்த்!' என்று சொல்லி வணங்கினர்.

• • •

மேற்படி நிகழ்ச்சிகள் எல்லாம் சென்ற மாதம் 30ந் தேதி தேவகோட்டையில் நடந்த தமிழிசைப் பள்ளியின் ஏழாவது ஆண்டு விழாவில் கலந்து கொள்வதற்காகக் கல்வி மந்திரி கனம் மாதவமேனனும் 'கல்கி' ஆசிரியரும் சென்றிருந்த போது அமராவதிப் புதூர் மகளிர் இல்லத்தில் நடந்தது.

தேவகோட்டை தேவர்கள் கோட்டையாக விளங்கிற்று என்று சொல்லவேண்டும். தமிழிசைப் பள்ளியின் ஆண்டு விழாப் பந்தல் தேவேந்திரனின் சபை போலவே கோலாகலமாக இருந்தது. செட்டிமார் நாட்டின் பிரமுகர்கள் எல்லோரும் தங்கள் குடும்பங்களுடன் வந்து குதூகலத்துடன் கூடியிருந்தார்கள். பந்தற் கால்கள் எல்லாம் "இனிய தமிழில் பாடி இசைக் கலையை வளர்ப்போம்" என்பது போன்ற வாசகங்களைப் பொறித்த போர்டுகளைச் சுமந்து பெருமை



தேவகோட்டை தமிழிசைப் பள்ளி ஏழாவது ஆண்டு விழாவில் பிரமாதமாக நடனமாடி சபையோரிடம் சபாஷ் பெற்ற குழந்தை சாரா

யோடு நின்றன. தமிழிசையை வளர்ப்பதற்கு அரும்பாடுபட்ட ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரின் திரு உருவப் படம் தமிழிசைப் பள்ளி ஆண்டு விழாவில் கூடியிருந்த ஆயிரக்கணக்கானவர்களைப் பார்த்து ஆனந்தப்படுவது போல் கம்பீரமாகக் காட்சி தந்தது. மேலே ஆனந்த நடனமிடும் தில்லை நடராஜனின் திரு உருவம் சாட்சாத் நடராஜப் பெருமானே விழாவில் கலந்து கொண்டிருப்பது போன்ற பிரமையை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

இவைகளை எல்லாம் பார்த்தபோது சுமார் ஏழு வருஷங்களுக்கு முன்னால் தமிழிசை இயக்கம் ஆரம்பித்த சமயம் இருந்த தமிழ்நாடு என் மனத்திரையில் தோன்றியது.

“என் ஸார்! உங்கள் தமிழ் இசை எப்படி இருக்கிறது?”

“நன்றாய்த்தானிருக்கிறது.”

“ஆமாம்; தமிழ் சங்கீதம் என்கிறீர்களே? பாட்டு மட்டும்தான் தமிழில் பாட வேண்டுமா? பைரவி, காம்போதி ராகங்களைக் கூடத் தமிழில் பாட வேண்டுமா?”

“பாட்டுக்களை மட்டும் தமிழில் பாடினால் போதும். ராகங்களைத் தெலுங்கிலேயோ இதர பாஷைகளிலேயோ பாடி ஆலாபனம் செய்யலாம்!”

இப்படியெல்லாம் பேசிக் கேலி செய்து கொண்டிருந்த சமயத்தில் தேவகோட்டையில் தமிழிசை மகாநாடு நடத்தினார்கள். அப்பொழுது ஆரம்பித்த தமிழிசைப் பள்ளிதான் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து இன்று தனது ஏழாவது ஆண்டு விழாவைச் சிறப்புடன் கொண்டாடுகிறது என்பதை நினைக்கும் போது என்னுடைய தோள்கள் விம்மி உயர்ந்தன. நல்ல வேளையாகக் கூட்ட நெருக்கடியில் என் தோள் மீதும் சிலர் உட்கார்ந்திருந்ததால் விழாப் பந்தலுக்கு ஆபத்து வரவில்லை.

இரண்டு பெண்கள் இனிய குரலில் கடவுள் வாழ்த்துப் பாடி விழாவை ஆரம்பித்து வைத்தார்கள். கடவுள் வாழ்த்து முடிந்தவுடன் தமிழிசைப் பள்ளியின் மாணவிகள் சுமார் நாலு பேர் வீணை வாசித்துச் சபையோரை மகிழ்வித்தார்கள்.

தமிழிசைப் பள்ளி நிர்வாக சபையின் தலைவர் ஸ்ரீ மகாலிங்கம் செட்டியார் சம்பிரதாய முறையில் விழாவுக்கு வந்திருந்தவர்களை யெல்லாம் வரவேற்றுப் பேசிவிட்டு, கல்வி மந்திரி கனம் மாதவ மேனன் அவர்களை விழாவுக்குத் தலைமை வகிக்கும்படி வேண்டிக் கொண்டார்.

தமிழிசைப் பள்ளியின் ஏழாவது ஆண்டு அறிக்கையை மிகத் துரித காலத்தில் ஸ்ரீ பாலசுப்பிரமணியம் படித்து முடித்த பிறகு, காரியதரிசி ஸ்ரீ டி. ஆர். அருணாசலம் கூட்டத்தில் எழுந்த சத்தத்தை அடக்க முயன்றார். முதலில் சாந்தமாகச் சொன்னார். தயவு செய்ய வேணுமென்று வேண்டினார்; அப்புறம் கோபமாகக் கத்தினார். கடைசியில் அதிகார தோரணையில் உத்தரவு போட்டார். ‘மைக்’கும் வஞ்சகமில்லாமல் அவர் கூறியதை யெல்லாம் ஒலி பரப்பித் தான் பார்த்தது. ஒன்றையுமே லட்சியம் செய்யாமல் அந்த மாபெரும் சபை சளசளவென்று சத்தம் போட்டுக் கொண்டே இருந்தது. ஸ்ரீ அருணாசலம் அலுத்துப் போய், “கல்கி ஆசிரியர் இந்த விழாவைத் தொடங்கி வைப்பார்!” என்று அறிவித்து விட்டு, தாம் ஒருவராவது சத்தம் போடாமலிருக்கலாம் என்று எண்ணியோ என்னமோ, உட்கார்ந்து விட்டார்.

“கல்கி” ஆசிரியர் விழாவைத் தொடங்கி வைத்துப் பேச ஆரம்பித்ததும் வேறொரு வகையான சத்தம் சபையில் எழுந்தது. கலகலவென்ற சிரிப்பும் கரகோஷ ஆரவாரமும் மற்ற எல்லாச் சத்தங்களையும் அடக்கிவிட்டன. தமிழிசை இயக்கம் தோன்றிய வரலாற்றையும் தேவகோட்டையில் நடந்த முதலாவது தமிழிசை மகாநாட்டின் சிறப்பைப் பற்றியும் கல்கி ஆசிரியர் நினைவூட்டி விட்டு, அந்த மகாநாட்டின் பயனாகத் தோன்றிய தமிழிசைப் பள்ளி அடைந்திருக்கும் முன்னேற்றத்தைக் குறித்துத் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார். ஸ்ரீ டி. ஆர். அருணாசலம் அவர்களின் இடைவிடா முயற்சியை வியந்து பாராட்டினார்.

பிறகு, விழாத் தலைவர் மாதவமேனன் பேசினார். மலையாளமும் தமிழும் கலந்து சங்கீதம் போலப் பேசினார். தமிழ் சங்கீதத்தின் உயர்வையும் தமிழர்களின் சிறந்த ரசிகத் தன்மையையும் பாராட்டிக் கூறினார். தமக்குச் சங்கீதத்தின் நுணுக்கங்களைப் பற்றித் தெரியாதென்றும் ஆனால் சங்கீதத்தை அனுபவிக்கத் தெரியும் என்றும் சொன்னார். “இந்தத் தமிழிசைப் பள்ளிக்கு என்னைத் தலைமை வகிக்கும்படி செய்தது காரியதரிசி அருணாசலத்தின் குறும்பும் நண்பர் சா. கணேசனின் அன்புந்தான் காரணம் என்று நினைக்கிறேன்” என்று சொல்லிவிட்டு, “குழந்தைகளை ஐந்து வயது வரையில் மிகவும் ஜாக்கிரதையாக வளர்க்க வேண்டும். அதுவரை அவர்களுக்குப் பாலாரிஷ்டம் வராமல் பார்த்துக் கொள்ள வேண்

டும் என்று எங்கள் ஊரில் சொல்லுவார்கள். இந்தத் தமிழிசைக் குழந்தைக்கோ ஏழு வயது பூர்த்தியாகி விட்டது. ஆகவே இது பாலாரிஷ்டத்தை எல்லாம் தாண்டிவிட்டது. இனிமேல் இந்தத் தமிழ் இசைப் பள்ளியைப் பற்றி கவலைப்பட வேண்டியதில்லை" என்று கூறி அமர்ந்தார்.

அடுத்தாற் போல் தமிழிசைப் பள்ளி மாணவிகளின் நடனம் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டது. உடனே அரங்க மேடையின் திரை விலகிற்று. தமிழிசைப் பள்ளி மாணவிகளின் நடனம் ஆரம்பமாயிற்று. நடனம் ஆடிய எல்லா மாணவிகளும் நன்றாகவே ஆடினார்கள். எனினும், குறுகுறுப்பான முகத் தோற்றத்தைக் கொண்ட [illegible] என்னும் குழந்தையின் விறுவிறுப்பான நடனம் சபையோரின் உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண்டது.

நடன அரங்கம் முடிந்த பிறகு ஸ்ரீமதி குட்டியம்மாளு அம்மாள் தேர்ச்சி பெற்ற சில தமிழிசைப் பள்ளி மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார். முடிவுரையாக அவர்கள் பேசிய பேச்சில் தாயின் அன்பு கரைபுரண்டு ஓடியது.

ஸ்ரீ சா. கணேசன் தமிழிசைப் பள்ளி மாணவிகளால் தமிழிசைப் பள்ளி கட்டட நிதிக்காகக் காரைக்குடியில் நடக்கும் உதவி நடனக் கச்சேரிக்கு எல்லோரும் தாராளமாய்ப் பொருள் உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். "காசுகளாகக் கொடுக்கலாம், ரூபாய்களாகக் கொடுக்கலாம், நோட்டுகளாகக் கொடுக்கலாம், செக்குகளாகவும் கொடுக்கலாம்!" என்று அவர் சொன்னார். தமிழிசைப் பள்ளி ஆண்டு விழா இனிது முடிந்தது.

தமிழிசைப் பள்ளிக் கட்டட நிதிக்குக் காசுகளும், ரூபாய்களும், செக்குகளும் மட்டும் கொடுத்தால் போதுமா? கொஞ்சம் மனதைத் தாராளமாகத் திறந்து தங்கக் கட்டிகளாகக் கொடுக்க வேண்டும். வசதியும் வள்ளன்மையும் உள்ளவர்கள் கட்டடமே கட்டிக் கொடுக்கலாம். இருந்தாலும் கட்டட உதவி நடனம் காரைக்குடியில் நடக்கப் போவதை மறந்து விடாதீர்கள்.

* * *

இடையில் ஒரு ருசிகரமான விஷயத்தைச் சொல்லிவிட வேண்டும். மகளிர் இல்லத்தில் ஸ்ரீமதி மரகதவல்லி அம்மையார் அவர்கள் செய்திருந்த அருமையான நளபாக சமையலைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். அதிலும், அவர்கள் செய்திருந்த கேப்பை (ராகி) மாப் புட்டு இருக்கிறதே, அதை நளனால் கூட அவ்வளவு நன்றாகச் செய்திருக்க முடியாது!

அவ்வளவு நல்ல சமையலை சாப்பிட்டு வளரும் குழந்தைகள் குதூகலமாக இருப்பதற்குக் கேட்கவா வேண்டும்?

இந்த மகளிர் இல்லத்தில் ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சி. அவர்கள் சொல்வது போல் பாழாய்ப்போன பரீட்சை இல்லை; பாட புத்தகக் கொடுமை இல்லை. அவற்றுக்குப் பதிலாக டாக்டர் மாண்டிஸோரி அம்மையாரின் முதிர்ந்த அநுபவத்தின் லட்சியத்தைப் பின் பற்றிப் பள்ளிக்கூடம் நடத்தப்படுகிறது. இந்த அருமையான தொண்டை அரும்பாடு பட்டுச் செய்து வரும் ஸ்ரீ முருகப்பா அவர்களையும் அவரது அருமை மனைவியார் ஸ்ரீமதி மரகதவல்லி அம்மையார் அவர்களையும் வாழ்த்தி வணங்குகிறேன்.

---

# திருவையாறு திருவிழா

திருவையாறு ஸ்ரீ தியாகப் பிரம்ம மகோற்சவத்தின் வரலாறு

●

கோட்டு வாத்தியம் ஸ்ரீ துரையப்ப பாகவதர்

எழுதுகிறார்

●

அடுத்த "கல்கி" இதழிலிருந்து ஆரம்பமாகிறது




எஸ். டி. ஸ்ரீநிவாசன்

கூடத்துச் சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் பன்னிரண்டடித்தது. வேலைக்கார முனியன் பின் தொடர, தோளில் மாட்டிய புஸ்தகப் பையுடன் வீட்டுக்குள் ஓடி வந்தாள் சரோஜா.

"அம்மா!, அம்மா! இந்தப் புதுப் பள்ளிக்கூடம் ரொம்ப நன்னா இருக்கு அம்மா! ஹெட் மாஸ்டர் ஸார் ரொம்ப நல்லவர்! நல்ல கதையெல்லாம் சொல்றார் அம்மா! சீக்கிரம் சாதம் போடு. மறுபடியும் இரண்டு மணிக்கெல்லாம் பள்ளிக்கூடம் போகணும்" என்று கமலாவிடம் சொல்லிக் கொண்டே சரோஜா தோளில் மாட்டிக் கொண்டிருந்த பையை எடுத்துக் கூடத்தில் ஒரு மூலையில் வைத்துவிட்டுச் சமையற் கட்டுக்குப் போய்ச் சாப்பிட உட்கார்ந்தாள்.

பட்டணத்தில் இருந்த வரையில் பள்ளிக்கூடம் போவதற்கு அழுது கொண்டிருந்த சரோஜா, இந்த காட்டுப்புறத்துப் பள்ளிக்கூடத்தைப் பற்றிச் சிலாக்கியமாகச் சொல்லிக் கொண்டு வந்தது கமலாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. உள்ளே சென்று அவளுக்குச் சாதம் பரிமாறி விட்டுத் தன் கணவன் இருந்த அறைக்குச் சென்றாள்.

"என்னா! சரோ பள்ளிக்கூடத்திலே இருந்து வந்து சாப்பிட்டாச்சு! அவளைக் கூப்பிட்டு சமாசாரம் என்னன்னு கேளுங்களேன். இனிமேல் தினம் பள்ளிக்கூடம் போகப்போறளாம். இந்தப் பள்ளிக்கூடம் அவளுக்கு ரொம்பப் பிடிச்சிருக்காம்" என்று கமலா சொல்லி முடிப்பதற்குள் சரோஜாவே அங்கு ஓடி வந்து விட்டாள்.

"என் சரோ! புதுப் பள்ளிக்கூடம் எப்படி!" என்று கேட்டான் சேதுராமன்.

"ரொம்ப நன்னா இருக்கு அப்பா! ஹெட் மாஸ்டர் ரொம்ப நல்லவர் அப்பா!" என்று சொல்லிக் கொண்டே அப்பாவின் பக்கத்தில் போய் உட்கார்ந்தாள் அவள். பெற்றோர் இருவரும் சிரித்துக் கொண்டே "சரி! நீ இன்னிக்கு என்னென்ன கத்துண்டே?" என்று கேட்டார்கள்.

"ஒண்ணு, ரெண்டு—படம், பட்டம்—ராமர் கதை! அந்தக் கதை ரொம்ப நன்னா இருந்தது அப்பா! இன்னிக்கு மத்தியானம் இன்னொரு நல்ல கதை சொல்றேன்னு சொல்லி இருக்கார் அப்பா! ஹெட் மாஸ்டரே எங்க கிளாஸுக்கு வரார்" என்று மறுபடியும் தன் பள்ளிக்கூடத்துப் பெருமையைச் சொல்ல ஆரம்பித்து விட்டாள் சரோஜா.

கமலாவுக்குச் சட்டென்று ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது.

"மத்தியானம் இவளைக் கொண்டுவிடப் போகும்போது அந்த ஹெட் மாஸ்டரை விசாரியுங்கோ. அவரை ரொம்ப இவளுக்குப் பிடிச்சிருக்கு. வீட்டுக்கு வந்து 'டியூஷன்' சொல்லிக் கொடுப்பாரான்னு கேளுங்கோ. நாளைக்கு நீங்க ஊருக்குப் புறப்பட்டுப் போறதுக்குள்ளே ஏற்பாடு செய்துடணும். சரோவுக்கு இப்பவே ஆறு

வயசு ஆயிடுத்து. மறுபடியும் பட்டணம் போகும்போது செகண்ட் ஃபாரவிலே யாவது சேர்க்கணும்" என்றான்.

"சரி! விசாரிச்சுண்டு வரேன்" என்றான் சேதுராமன்.

சரியாக ஒன்றரை மணிக்குச் சரோஜாவைப் பள்ளிக்கூடத்தில் விட்டு விட்டு வருவதற்காக அவளைக் காரில் ஏற்றிக் கொண்டு கிளம்பினான் சேதுராமன்.

* * *

சேதுராமன் சென்னையில் செக்ரட்டேரியட்டில் உத்தியோகம் பார்ப்பவன். அவன் சொந்த ஊர் மதுரைக்கடுத்த மயிலம்பட்டி. சமீபத்தில் அவனை மதுரை ஜில்லாவுக்கே தானியக் கொள்முதல் ஸ்பெஷல் டிப்டி கலெக்டராக நியமனம் செய்திருந்தார்கள். மதுரைக்குப் பக்கத்திலேயே தன் கிராமம் இருந்ததால், தன் ஜாகையைக் கிராமத்திலேயே வைத்துக் கொண்டான். இரண்டு மூன்று தினங்களுக்கு முன்புதான் அவர்கள் சென்னையிலிருந்து கிராமத்துக்கு வந்து சேர்ந்தனர்.

இன்னும் இரண்டு தினங்களில் சேதுராமனுக்கு அந்த ஜில்லா முழுவதும் சுற்றித் தானியக் கொள்முதல் செய்ய வேண்டிய வேலை இருந்தது. தன் பெண்ணின் படிப்பில் மிகவும் கவலை கொண்டிருந்த அவன் அதற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும் என்று நினைத்திருந்தான். சகல சௌகரியங்களோடு கூடிய பட்டணத்துப் பள்ளிக்கூடமே சரோஜாவுக்குப் பிடிக்காமல் இருந்தபோது காட்டுப்புறத்துப் பள்ளிக் கூடத்துக்கு அவள் எங்கே போகப் போகிறாள் என்று எண்ணியிருந்த அவனுக்குச் சரோஜாவின் போக்கு ஆச்சரியத்தோடு சந்தோஷத்தையும் அளித்தது.

* * *

ஒரு மணி நேரத்தில் திரும்பி வந்தான் சேதுராமன். காரை வாசலில் நிறுத்திவிட்டு, உள்ளே வந்து சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தான். கையில் காப்பி டம்ளருடன் வந்த கமலா "என்ன? ஏதாவது ஏற்பாடு செய்தீர்களா?" என்று கேட்டாள்.

கமலா கொண்டு வந்த காப்பியைக் குடித்து விட்டு, "சரி! சரோஜா சொன்னதிலே ஒரு அணுவளவு கூடப் பிசகில்லை. அவர் ரொம்ப நல்ல மாதிரி! அவரிடத்திலே பசங்கள் என்னமா ஒட்டிண்டிருக்கு தெரியுமா? என் வயசுதான் இருக்கும் அவருக்கு. இன்னும் அவருக்குக் கல்யாணம் ஆகவில்லை. அவரோடு பேசப் பேச ஒரு தனி உற்சாகம் உண்டாகிறது. அவர் ஒரு எம். ஏ. பட்டதாரியாம்!" என்று சொல்லிச் சற்று நிறுத்தினான் சேதுராமன்.

"ஆமாம்! சரோஜாவுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதற்கு ஒப்புக் கொண்டாரா?" என்று கேட்டாள் கமலா.

"அதைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன்! அவருக்குச் சம்பளமாக எதுவும் தேவையில்லையாம். அவர் முதியோர்களுக்காக ராத்திரிப் பள்ளிக்கூடம் ஒன்று நடத்துகிறாராம். அதற்கு ஏதாவது உதவி செய்தால் போதும் என்றார். நாளை முதல் வீட்டிற்கு வந்து சரோவுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்படியும் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். காலைக்குக் காலையிலே வருவார்" என்றான் சேதுராமன்.

கமலா அதைக் கேட்டவுடன் பரம திருப்தியுடன் உள்ளே போய்த் தன் வேலையைக் கவனிப்பதில் ஈடுபட்டாள்.

## 2

ஹெட்மாஸ்டர் ராமச்சந்திரன் சரோஜாவுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க வர ஆரம்பித்து ஒரு வாரமாய்விட்டது. சேது



ராமன் தானியக் கொள்முதலுக்குக் கிளம்பி விட்டான். சுசிலாவுக்குத் தன் கணவனும், சரோஜாவும்—என் ஊரார் எல்லோருமே சேர்ந்து புகழும் அந்த லட்சிய புருஷனை—அந்த ஹெட்மாஸ்டரைப் பார்த்து இரண்டு வார்த்தைகள் பேச வேண்டும் என்று மனது கிடந்து அடித்துக் கொண்டது. ஆனால் லஜ்ஜை குறுக்கே நின்றது. தினம் ராமச்சந்திரன் வந்ததும், நேராக முன் பக்கத்து அறையில் போய் உட்கார்ந்து விடுவான்; சரோஜா வருவாள். குரலைக் கூட அதிகமாகத் தூக்காமல் சரோஜாவுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துவிட்டுப் போய்விடுவான். சுசிலாவின் அபிலாஷை நிறைவேறாமலே யிருந்தது.

அன்று ராமச்சந்திரன் பாடம் சொல்லித் தர வந்தபோது சரோஜா ஸ்நானம் செய்து கொண் டிருந்தபடியால் அவன் 'சற்றுக் காத்திருக்க வேண்டியதாய் இருந்தது. நேரத்தை வீணாக்காமல் அங்கு மாட்டியிருந்த படங்களைப் பார்த்துக் கொண்டே வந்தான். மேஜையின் மேல் வைத்திருந்த இரண்டு போட்டோக்களைக் கண்டதும் அவன் திடுக்கிட்டுப் பின்னடைந்தான்.

''சரோ! காப்பி குடிக்காமல் வந்துட்டயே! இதோ கொண்டு வந்திருக்கேன். சாப்பிடு'' என்ற குரல் வெளியிலிருந்து கேட்டது. ராமச்சந்திரனின் காதுகளுக்கு அது பரிச்சயமான குரல் போல் தோன்றியது. அடுத்த நிமிஷம், பெண்ணுக்குக் காப்பி கொண்டு போய்க் கொடுப்பதைக் காரணமாக வைத்துக் கொண்டு அந்த லட்சிய உபாத்தியாயரைப் பார்த்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் அறையினுள் நுழைந்தாள் சுசிலா. ராமச்சந்திரனும் சுசிலாவும் ஒருவரை ஒருவர் ஒரு கணம் பார்த்துக் கொண்டனர். தலை 'கிர்' என்று சுற்றுவது போன்ற பிரமை தட்டியது ராமச்சந்திரனுக்கு; நிலை மிதித்து விட்டாற்போல் இருந்தது சுசிலாவுக்கு. சட்டென்று சுசிலா கலங்கிய மனத்துடன் வெளியே சென்றுவிட்டாள்.

ராமச்சந்திரனும் அன்று அதிக நேரம் தங்கியிருக்க முடியவில்லை; சீக்கிரமே தன் வேலையை முடித்துக்கொண்டு வீட்டுக்குச் சென்று விட்டான்.

உள்ளே சென்ற சுசிலாவுக்கு எந்த வேலையின்மேலும் கவனம் செல்லவில்லை; வாழ்க்கையில் அவள் அடைந்திருந்த ஒரு பெரும் ஏமாற்றம் — மனத்தின் அடியில் மங்கி [மறைந்து போயிருந்த ஒரு துக்ககரமான சம்பவம்—அவள் நினைவுக்கு வந்து பெரும் வேதனையைக் கொடுத்தது.

## 3

சுசிலாவின் பெற்றோர்கள் சென்னையில் திருவல்லிக்கேணியில் வசித்து வந்தனர். ஏழு எட்டு வருஷங்களுக்கு முன் அவள் இண்டர்மீடியட்டில் வாசித்துக் கொண்டிருந்தாள். பரீட்சைக்கு இன்னும் ஆறே மாதங்கள் இருந்தன. சுசிலாவுக்கு அவள் பிரத்யேக பாடமாக எடுத்துக்கொண்டிருந்த ரசாயன பாடம் கொஞ்சம் கடினமாக இருந்தது. இதை யறிந்த அவள் தகப்பனார் அவளுக்கு ரசாயன பாடம் சொல்லிக் கொடுக்க வீட்டில் பிரத்தியேகமாக ஒரு வாத்தியாரை வைப்பதெனத் தீர்மானித்தார். ஒரு நல்ல வாத்தியாராக அனுப்பும்படித் தம் சிநேகிதர் சிலரிடமும் சொல்லி வைத்திருந்தார்.

ஒருநாள் அவர் சிநேகிதர் எம். ஏ. பட்டம் பெற்ற வாலிபன் ஒருவனை அழைத்து வந்து அறிமுகம் செய்து வைத்தார்.

சுசிலாவின் தகப்பனார் தம் ஒரே பெண்ணுக்குச் சிறு பிள்ளை ஒருவனை வாத்தியாராக நியமிப்பதா என்று முதலில் யோசனை செய்தார். வேறு நல்ல வாத்தியார் ஒருவரும் கிடைக்காமல் போகவே ராமச்சந்திரனையே சுசிலாவுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தார்.

தினம் சுசிலாவின் வீட்டுக்கு வந்து 'தான் உண்டு தன் வேலையுண்டு' என்று குனிந்த தலை நிமிராமல் சுசிலாவுக்குப் பாடத்தைச் சொல்லிக் கொடுத்துவிட்டுப் போய் விடுவான் ராமச்சந்திரன். அநாவசியமான விஷயங்களில் தலையிடமாட்டான். இதைக்கண்ட சுசிலாவின் தகப்பனாருக்கும் தாயாருக்கும் அவனிடத்தில் அலாதி அபிமானமும் மதிப்பும் ஏற்பட்டுவிட்டது.

நாளா வட்டத்தில் அவர்கள் மனத்தில் சுசிலாவை ராமச்சந்திரனுக்கே மணம் செய்து வைத்துவிட்டால் என்ன என்ற எண்ணமும் எழுந்தது. வீட்டில் இந்த விஷயம் பிரஸ்தாபிக்கப் படுவதை யறிந்த ராமச்சந்திரனும் சந்தோஷமடைந்தான். சுசிலாவின் பெற்றோர் இந்தப் பேச்சை எடுத்தால் சுசிலா வெட்கத்தினால் அந்த இடத்தில் நிற்காமல் ஓடிவிடுவாளே தவிர உள்ளூற அவள் ராமச்சந்திரனையே விரும்பினாள்.

அவளுடைய பரீட்சைகள் முடிந்தன. அவளுடைய திருமணத்துக்கு ஏற்பாடு செய்ய ஆரம்பித்தார் அவளுடைய தந்தை.

கல்யாண காரியத்தைக் கவனிப்பதற்காக ஊரிலிருந்து சீலாவின் தகப்பனாரைப் பெற்ற பாட்டி குப்பம்மாள் சென்னைக்கு வந்தாள். அவள் வந்த சில தினங்கள் கழித்துச் சீலாவின் தகப்பனார் இந்த வரனைப் பற்றிப் பிரஸ்தாபித்தார். உடனே அவள், "என்டா அப்பா! வேறு வரன் ஒன்றும் உனக்கு அகப்படலையோ?" என்றாள்.

"ஏன் அம்மா! இந்த வரனுக்கு என்ன?"

"ஊரிலே ஏதோ சொல்லிக்கிறானே அந்தப் பிள்ளையாண்டானைப் பத்தி."

"என்ன சொல்லிக்கிறா?"

"நாலு வருஷத்துக்கு மூந்தி ஆறு மாசம் ஜெயிலிலே இருந்தானாம்."

"காங்கிரஸிலே சேர்ந்திருந்தான். கவர்ன்மெண்டார் சிறையிலே போட்டுட்டா, நாட்டுக்காக ஜெயிலுக்குப் போனது கௌரவம் தானே?" என்றார் சீலாவின் தகப்பனார்.

"நம்ம குடும்பம் நல்ல குடும்பம். ஊரிலே பலபேர் பலவிதமாய்ப் பேசும்படியான காரியத்தைச் செய்யாதே!" என்றாள் தாயார்.

ஆகவே சீலாவின் தகப்பனார் வேறு இடத்தில் வரன் பார்த்தார். சீக்கிரத்திலேயே சேதுராமனுக்கும் சீலாவுக்கும் திருமணம் நடந்தது. சீலாவும் தன்னைச் சற்றுத் தேற்றிக் கொண்டு சேதுராமனுடன் தன் வாழ்க்கையை ஆரம்பித்தாள்.

சீலாவை மணந்து வாழ்க்கை நடத்த வேண்டும் என்று திட்டம் போட்டிருந்த ராமச்சந்திரன் தன் திட்டம் தகர்ந்து விடவே, வேறு எந்தப் பெண்ணையும் மணந்து கொள்ள விரும்பவில்லை. அவன் ஊரை விட்டே போய்விட்டான்.

4

கடிகாரம் ஒன்பதடிக்கும்போதுதான் சுய உணர்வடைந்தாள் சீலா. சட்டென்று சரோஜாவுக்கு 'டிரெஸ்' பண்ணி அவளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினாள். பழைய சம்பவங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கும்போதே அவள் ஒரு முக்கியமான முடிவுக்கு வந்து விட்டாள். "அவருடைய வாழ்க்கை நம்மால்தானே பாழடைந்து விட்டது? மறுபடியும் நாம்தான் அவர் வாழ்வில் ஒளி உண்டாக்க வேண்டும். நம் கணவர் வந்ததும், அவர் தங்கை கமலியை ராமச்சந்திரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து ஒரு நல்ல உத்தியோகமும் பார்த்துக் கொடுக்கச் சொல்லி ஏற்பாடு செய்ய வேண்டும்"

## இவர்தான்!



"இவர்தான் வாரம் ஒருநாள் உபவாசம் இருக்கும் சங்கத்தின் தலைவர்!"

என்று எண்ணிய அவளுடைய முகத்தில் ஒரு தனி உற்சாகம் காணப்பட்டது.

• • •

மறுநாள் சரோஜா பள்ளிக்கூடத்தில் இருந்து வரும்போதே தலையைத் தொங்க விட்டுக் கொண்டு வந்தாள். அவளைக் கண்ட சீலாவுக்கு 'ஏதோ என்னவோ!' என்று தூக்கி வாரிப் போட்டது.

"என்னடீ சரோ? ஒரு மாதிரியாக இருக்கே?" என்று கேட்டாள் சீலா.

"ஹெட்மாஸ்டர் நேத்து சாயங்காலம் ஊருக்குப் போயிட்டாராம் அம்மா! எப்போ மறுபடியும் திரும்பி வருவார்னு தெரியாதாம். இப்போ பள்ளிக்கூடமே நன்னா இல்லையம்மா!" என்றாள் சரோஜா.

விஷயம் என்னவென்று அறிய எண்ணி சீலா வேலைக்கார முனியனைக் கூப்பிட்டுக் கேட்டாள்.

"ஆமாங்க, நேத்து சாயந்திரமே ஹெட்மாஸ்டர் ஐயா ஒத்தை மாட்டு வண்டியிலே அவங்க ஊருக்குக் கிளம்பிட்டாருங்க! அவங்க அம்மா ரொம்ப சீக்காக இருக்காங்களாம்! கூடவே இருக்கணுமாம்! வேலையை ராஜிநாமா பண்ணிப்புட்டே புறப்பட்டு போயிட்டாருன்னுதான் சொல்லிக்கிறாங்க. நல்லவரு. திரும்பிவருவாரோ மாட்டாரோ?" என்று தன் வருத்தத்தையும் தெரிவித்துக் கொண்டே தன் குடிசையை நோக்கிப் புறப்பட்டான் அவன்.

ஆனால் மயிலம்பட்டி வாத்தியாரின் பெற்றோர்கள் இறந்து எத்தனையோ வருஷங்கள் ஆகிறது என்று சீலாவுக்கா தெரியாது?

# படகு புறப்படுகிறது

ராமன், லக்ஷ்மணன், சீதை மூவரும் கங்கைக் கரையை அடைந்தார்கள். ஒரு ஆசிரமத்தில் தங்கினார்கள்.

ரிஷிகள் சிலரோடு உட்கார்ந்து ராமன் பல அரிய விஷயங்களைப் பற்றி அளவளாவிக் கொண்டிருந்தான். பொழுது பிரயோசனமாகக் கழிந்தது.

அந்தச் சமயம் குகன் வந்து ராமனைக் கண்டு தொழுகிறான். குகனுடைய பரிவும் அளவற்ற அன்பும் ராமனை உருக்கி விடுகின்றன. ஏன், லக்ஷ்மணனையும் சீதையையுமே உருக்கி விடுகின்றன. ராமன், லக்ஷ்மணன், சீதை, குகன் என்று நால்வர் அடங்கிய குடும்பமும் ஏற்பட்டு விடுகிறது.

நால்வரும் கங்கையைக் கடக்க வேண்டும்.

மறுநாள் காலை. குகன் படகு கொண்டு வந்தான். ராமனுக்குத் தெரியப்படுத்தினான். நால்வரும் ஆசிரமத்தை விட்டு நடந்து, கங்கைக் கரையை அடைகிறார்கள். படகிலும் ஏறி விடுகிறார்கள். 'படகை வேகமாகவே விடு' என்று சொல்லுகிறான் ராமன்.

அதற்குக் காரணம் இருக்கிறது. கரைப் பக்கமாக ராமனது கண் போக நேர்ந்தது தான் காரணம்.

'விடுகுதி கடி'தென் றான்;—மெய்யுயிர் அனையா னும்
முடுகினன்; நெடுநா வாய்முரிதிரை நெடுநீர் வாய்
கடிதினின் மடஅன் னக்கதியது செல;—நின் ற
இடருறும் மறையோ ரும்எரியுறும் மெழுகா னார்.

[கடிது: வேகமாக; மெய்யுயிர் அனையானும்: குகனும்; நெடு நாவாய்: விசாலமான படகு; முரிதிரை நெடுநீர் வாய்: இழிந்தோடும் அலைகளுக்கிடையே; நின்ற: வழியனுப்ப வந்து கரையில் நின்ற.]

முனிவரது பிரிவாற்றாமையைப் பார்க்க ராமனுக்குச் சகிக்கவில்லை: வேகமாகவே படகை ஓட்டச் சொல்லுகிறான்.

முனிவர்கள் கையை நெரித்துக் கொண்டு கரையில் நிற்பதும், கொஞ்சம் எட்டி ஆசிரமமும், ஆசிரமத்தைச் சேர்ந்த அங்கங்களான மயில்களும் வெறித்த மான்களும் ராமனது மனசை விட்டுப் போகவா செய்யும்?

முனிவர்களிடம் விடைபெற்றுக் கொள்வதில் ராமனுக்குத் துணை புரிந்தது படகு.

• •

சென்னை ராஜாஜி மண்டபத்தில் நவம்பர் 11, 12, 13 தேதிகளில் கம்பர் மகாநாடு நடைபெறுகிறது. 11-ந் தேதி மாலை 6-மணிக்குக் கம்பர் கலைக் கண்காட்சியைப் பிரதமர் குமாரசாமி ராஜா திறந்துவைக்கிறார். ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் தலைமை வகிக்கிறார். ஸ்ரீ தண்டபாணி தேசிகர், இசை விருந்தளிப்பார். 12-ந் தேதி மகாநாட்டை ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியார் ஆரம்பித்து வைக்கிறார். ஸ்ரீ தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார். 12, 13 இரு தேதிகளிலும் பல அறிஞர்கள் கம்பர் மகாநாட்டில் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள். இசைவிருந்துகளும் உண்டு. சென்னைத் தமிழன்பர்களும் ரஸிகர்களும் மகாநாட்டுக்கு விஜயம் செய்து சிறப்பிக்கக் கோருகிறோம்.

# வட்ட மேஜை

## ★ சாஸனம் சொல்லுகிறது!

அக்டோபர் 16-ந் தேதி 'கல்கி' இதழில் ஆந்திர நாவலாசிரியர் ஒருவர் 'பழவேற்காடு வரையில் தெலுங்கு நாட்டின் எல்லை' என்று எழுதி யிருந்ததைத் தாங்கள் வெளியிட்டீர்கள். அதோடு இன்னும் சில ஆதாரங்களையும் சேர்த்துக் கொள்ளலாம்.

நமது பழந் தமிழ் நூல்கள் தென் குமரியையும் வடவேங்கடத்தையும் தமிழ்நாட்டு எல்லையாகப் பறை சாற்றுகின்றன.

நான் தமிழைப்போல் தெலுங்கிலும் பற்றுடையவன். தெலுங்குப் பத்திரிகைகள் பலவற்றைப் படிக்கும் வாய்ப்பு எனக்கு அமைந்திருப்பதால் சரித்திர, பூகோள விஷயங்களை அடிக்கடி பார்ப்பேன். தெலுங்கில் 'பாரதி' ஓர் உயர்தர மாத சஞ்சிகை. அதில் ஓர் ஆராய்ச்சியாளர் பல்லவ ராஜ்யத்தைப் பற்றிச் சொல்லும்போது கர்நூலைப் பற்றிய பிரஸ்தாபம் வருகிறது. பல்லவர் காலத்தில் அங்கே தமிழ் அரசு செலுத்தி யிருக்கவேண்டுமென்பதைக் 'கந்தனூர்' சாஸனம் சொல்லாமல் சொல்லுகிறது. இன்று 'கர்நூல்' என்று வழங்கும் ஊர், சாஸனத்தில் 'கந்தனூர்' என்ற அசல் தமிழ்ப் பெயரால்—தமிழ்த் தெய்வத்தின் பெயரால் வழங்கப்பட்டிருக்கிறது. பல்லவர் காலத்துக்குப் பின்பு கந்தனூர் தெலுங்கு ஆட்சிக்கு அடங்கி, கந்தனோலு, கந்தனவோலு என்றெல்லாம் மருவிச் சிதைந்து இன்று 'கர்நூல்' ஆகிவிட்டது. இதை ஒரு தெலுங்குப் பத்திரிகை சொல்லுகிறது: கவனிக்க வேண்டும்! அவ்வூரில் முருகன் கோயில் கொண்டிருந்ததாகவும் சொல்லுகிறது!

இன்னும் தெலுங்கும் தமிழும் அறிந்தவர்கள் ஒப்புக்கொள்ளக் கூடிய ஊர்களின் தமிழ்ப் பெயர்கள் இன்று எவ்வளவு இருக்கின்றன?

'கின்னெர' என்ற தெலுங்குப் பத்திரிகையில் 'பாக நாடு' என்ற நிலப் பிரிவினை எப்படி உண்டாயிற்று என்று ஒருவர் ஆராய்கிறார். நெல்லூருக்கு வடக்கே வெகு தூரம் வரையில் 'பாக நாடு' பரவி யிருந்ததாம். பாக்கு மரங்கள் நிறைந்த நாடு என்ற தமிழ்ச் சொல்லே 'பாக நாடு' ஆயிற்றாம்.

இன்று நிஜாம் ராஜ்யத்துக்குள் அடங்கிய 'ஓரு கல்லு' என்ற ஊரின் தெலுங்குப் பெயருக்குச் சரியான வடமொழிப் பெயர் 'ஏகசிலா' நகரம் என்றிருக்கிறது. ஒரு கல்லு என்ற பெயருக்குச் சரியான பொருள் 'ஒரு கல்' என்ற தமிழ்ப் பதமே.

நெல்லூர், சித்தூர், திருப்பதி என்ற பெயர்களெல்லாம் சுத்தத் தமிழ்ப் பெயர்களே. இவற்றைப் பற்றி நான் புதிதாக ஒன்றும் சொல்ல வரவில்லை.

இன்று ஆந்திர சகோதரர்கள் ஒவ்வொரு பத்திரிகையிலும் ஆந்திர மாகாணப் பிரச்னையைப் பற்றி வெகு காரசாரமாக எழுதுகிறார்கள். சென்னை நகரம் இல்லாத ஆந்திர மாகாணம் தலையில்லாத முண்டம் போல் இருக்குமாம். சென்னை இல்லாத ஆந்திர மாகாணத்துக்குத் தலைவர்கள் ஒப்புக்கொண்டால் வாயில்லாத ஆந்திரப் பிரஜைகளுக்குத் துரோகம் செய்ததாகுமாம். இன்னும் எவ்வளவோ? அவசியமானால் சத்தியாக்கிரகம் கூடச் செய்து சாதிக்கப் போகிறார்களாம்.

இதெல்லாம் பார்க்கப் பார்க்கப் 'பொய்யுடை யொருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே, மெய்போலும்மே' என்றபடி ஆந்திரர்கள் மூர்க்கப் பிடிவாதத்தால் பச்சைத் தமிழ் நாடாகிய சென்னையைத் தமதாக்கிக் கொள்வதும் சாத்தியமாகலாம் என்ற பயம் தமிழ் மக்களின் மனத்தில் தோன்றுவது இயல்பல்லவா? தமிழ் நாட்டுத் தலைவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?

சென்னை
3—11—49

சீதா

○●○

## இது என்ன (அ)நியாயம்?

சீனிக் கஷ்டம் நீங்கவில்லை. இவ்வூர்ப் பொது ஜனங்களுக்கு அரிசி ரேஷன் கார்டுகளுக்குக் கால் வீசை, அரை வீசை என்று சில இடங்களில் கொடுக்கப்படுகிறது. சிலருக்குக் கொடுக்கப்பட்ட பிறகு சரக்கு ஆகிவிட்டதை அறிவிக்கும் பலகை வெளியில் தொங்க விடப்பட்டு விடுகிறது. அதுவும் வெய்யிலில் நின்று, கூட்டத்தில் அடிபட்டு இதை அறியவேண்டி யிருக்கிறது. முனிசிபல் கவுன்சிலர்களுக்கு 3 வீசைகளும், வக்கீல்களுக்கு 4 வீசைகளும், ஹைஸ்கூல் உபாத்தியாயர்களுக்கு 2 வீசைகளும், கல்லூரி உபாத்தியாயர்களுக்கு 5 முதல் 10 வீசைகளும் (சம்பளத்திற்குத் தகுந்தபடி) பாங்க் ஊழியர்களுக்கு அரை வீசையும், முனிசிபல் சிப்பந்திகளுக்கு 2 வீசைகளும், மற்றும் அதிகாரிகளின் கீழ் சேவை செய்பவர்களுக்கும், செல்வாக்கு உள்ளவர்களுக்கும் சீனிக்கு "பெர்மிட்" தரப்பட்டு சீனி கொடுக்கப்படுகிறது. பொது மக்களில் யாரேனும் 'பெர்மிட்' பெறச் சென்றால் அலட்சியப்படுத்தப்பட்டு வெறுங்கையுடன் திரும்புகின்றனர். அவர்கள் வெளியில் "டிபூ"வில் நின்று கால் வீசைக்கும் அரை வீசைக்கும் அல்லல்பட வேண்டியதுதானா? "இது நம் அரசாங்கம். அதிகாரிகளுடன் பொதுமக்கள் ஒத்துழைக்கவேண்டும்" என்று கூறப்படுகிறது. இப்படி ஒருதலைப் பட்சமாக அதிகாரிகள் நடந்து கொண்டால் பொது மக்கள் ஒத்துழைக்க முடியுமா?

இவ்வூரில் ஏராளமாகச் சீனி மூட்டைகள் மொத்த வியாபாரிகளிடம் தேங்கிக் கிடப்பதாகவும், அதை வெளியிட அதிகாரிகள் அனுமதிக்கவில்லை என்றும் பேசிக் கொள்ளப்படுகிறது. மொத்த வியாபாரிகளிடம் சரக்கு வீணாகி விடுவதால் அதை எப்படியாவது தள்ளிவிட்டால் போதுமென்ற நிலையில் இருக்கிறார்களாம். அப்படி யிருக்க சீனி மூட்டைகளைத் தாராளமாக வெளியிட்டு எல்லாக் கடைகளுக்கும் கொடுத்து மக்களுக்குத் தாராளமாகக் கிடைக்கும்படி அதிகாரிகள் ஏன் செய்யக்கூடாது?

கும்பகோணம்
27—10—49

ஆர். கே. மூர்த்தி

## ★நெசவாளர்கள் சாகவேண்டியதுதானா?

இவ்வூரின் ஜனத்தொகை சுமார் 50,000 இருக்கும். மேற்படி ஜனத்தொகையில் 80 சதவிகிதம் பேர்கள் கைத்தறித்தொழிலையே நம்பி வாழ்பவர்கள். சுமார் ஆறுமாத காலமாக நெசவாளரின் வாழ்க்கை நரக வாழ்க்கையாய் இருந்து வருகிறது. இவ்வூரில் பத்து நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு சங்கத்திலும் சுமார் 500 தறிகள் வரை சேர்ந்து நடந்து வந்தது. சங்கங்களில் விற்பனையாகாமல் ஸ்டாக் பெருகப் பெருக நெய்து வந்த தறிகளைச் சிறுகச் சிறுக, நிறுத்திச் சற்சமயம் பூர்ணமாக நிறுத்தி விட்டார்கள். நெசவாளர்களிடம் கொஞ்சம் தஞ்சமிருந்த மூலதனத்தையும் வயிறு மகாராஜன் ஏப்பமிட்டு விட்டான்.

நெசவாளர்கள் தம் சொந்தப் பணத்தைக் கொண்டு நூல் வாங்கி பஜார் கடைகளில் விற்பனை செய்தால் 7 கஜச் சேலை ஒன்றுக்கு ஆறு அணா கிடைக்கிறது. மேற்படி ஆறு அணாவைக் கொண்டு குடும்பத்தை எப்படி நடத்துவது?

சென்ற பதினைந்து நாட்களாக ஆயிரக் கணக்கான நெசவாளர்கள் தங்கள் பெண்டு பிள்ளைகளுடன் ஊரிலிருந்து 2 மைல் 3 மைல் சென்று காட்டுக்குப் போய் "கீரை" எடுத்து ஜீவித்துக் கொண்டு (அதாவது உயிர் போய் விடாதபடி) இருக்கிறார்கள். கீரை வியாபாரமும் படுத்து விட்டது. நேற்று தினம் காட்டுக்குப் போனவர்களில் பாதிப் பேருக்கு மேல் திரும்பிவந்து விட்டார்கள்.

இவ்வூரில் பெரும்பாலான தொழிலாளர் நிலைமை இப்படி இருக்கிற காரணத்தால் காப்பி ஹோட்டல் உள்பட பலசரக்குக் கடை, வெற்றிலைப்பாக்குக் கடை, பார்பர் ஷாப் மற்றும் பலவிதமான வியாபாரக் கடைகளும் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. ஊரில் பணப் புழக்கம் என்பதைக் கண்ணில் காணுவதே மிகக் கஷ்டமாக இருக்கிறது. இந்த ஊரைப் பொறுத்த வரையில் பண வீக்கம் சுருங்கி, இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. நிலைமை மாறுவதற்கு வழியே இல்லையா? நெசவுத் தொழிலில் திறமையுள்ளவர்கள் பிச்சை எடுத்துக் காலம் கடத்துகிறார்கள் என்பதை எழுதும் சமயம் ரத்தக் கண்ணீர் சிந்தாமல் இருக்க முடியவில்லை.

மகாத்மா காந்தி அடிகளால் போற்றப் பட்ட குடிசைத் தொழில்களில் ஒன்றான கைத்தறி நெசவுத் தொழில் இந் நிலைமையில் இருப்பதைக் காணும் இந்நகரத்திலுள்ள அதிகாரிகளோ காங்கிரஸ் தலைவர்களோ இது சம்பந்தமாகப் பரிகாரம் தேடுவதற்கு ஒருவிதமான செயலையும் செய்வதாகக் காணோம்.

நெசவாளர்களின் இந்த நிலைமையைப் போக்குவதற்கு முடியாதே முடியாதா? அல்லது நெசவாளரும், நெசவுத் தொழிலும் இத்துடன் அழிந்து ஒழிய வேண்டியதுதானா?

அருப்புக்கோட்டை
4—11—49 பி. எஸ். சவுண்டையா

## நல் வரவு!




○●○

## ‘லெவி’ முறை வருமா’

ஒரு ஏக்கர் நிலத்திற்கும் குறைவாக விவசாயம் செய்யும் விவசாயிகளை நிர்ப்பந்தித்துக் கொள்முதல் செய்கிறார்கள். உதாரணமாக, 50 செண்டு பூமி விவசாயம் செய்பவருக்கு 11 மணங்கும், 40 செண்டு பூமிக்கு 15 மணங்கும், 61 செண்டுக்கு 13 மணங்கும், 86 செண்டுக்கு 21 மணங்கும், வசூலிக்க நோட்டீசு கொடுக்கப்பட்டிருக்கிறது. தவிர 84 செண்டு நிலம் வைத்திருக்கும் ஒருவருக்கு 1 ஏக்கர் 50 செண்டு நிலம் என்று அந்த நோட்டீசில் கண்டு, அதற்கு 23 மணங்கு நெல் அளக்க வேண்டுமென்றும் கண்டிருக்கிறது. இம்மாதிரியான புள்ளி விவரங்கள் நூற்றுக் கணக்கில் கொடுக்கமுடியும். இதில் முக்கிய விசேஷம் என்னவென்றால், கரும்பு, மஞ்சள், இவைகள் போடப்பட்டிருக்கும் பூமிகளையும் நெல் விவசாயம் உள்ளதாகக் கணக்கில் சேர்த்துக் கொள் முதல் செய்யப்படுகிறது.

தவிர, 'ஏ' லைசென்ஸ்தாரர் நெல் பிடிக்கும் விதமோ சொல்லத் தரமன்று. நாலேகால் படி பிடிக்கும் வள்ளத்தில் 1 மணங்குக்கு 16 வள்ளம் விதம் கொள் முதல் செய்கிறார்கள். ஆனால் சர்க்கார் கணக்குப்படி, 4 படி கொண்ட சர்க்கார் முத்திரை வள்ளத்தில் 15 வள்ளம்தான் கொள் முதல் செய்யவேண்டும். ஒரு விவசாயியிடம் 8 மூட்டை நெல் கொள் முதல் செய்ததில் மூட்டை ஒன்றுக்கு சர்க்கார் முத்திரை வள்ளத்தில் இருபத்திரண்டரை வள்ளம், அல்லது சாக்குப் பை உள்பட 125 ராத்தல் எடை இருக்க வேண்டும். ஆனால், 15 ராத்தல் உபரியாக அளந்து

கொண்டு போய்விட்டார்கள். கிராமாதிகாரிகளும் உடந்தையாக இருந்து விவசாயிகளை மிரட்டி அளக்கச் சொல்லுகிறார்கள். இம்மாதிரி ஆயிரக்கணக்கான மூட்டைகள் கொள் முதல் செய்யப்பட்டும், செய்தும் வருகிறார்கள்.

இதுமட்டுமா? ஒரு ஏக்கர் நிலத்தை அறுவடை செய்து நெல் கண்டு முதல் காண, கூலி மட்டும் 48 வள்ளம் ஆகிறது. ஆனால் அதிகாரிகள் நிர்ணயித்திருப்பது 28 வள்ளம். இது மிகவும் கம்மி என்று எவ்வளவு முறையிட்டாலும் அதிகாரிகள் செவியில் ஏறவில்லை.

அக்டோபர் மாதம் 14-ந் தேதி வெளியான பத்திரிகைகளில், உற்பத்தியில் ஏக்கர் ஒன்றுக்கு 25 சத விகிதம், கூலி, விதை முதலியவைகளைக் கழித்து பாக்கி இருப்பதைக் கொள் முதல் செய்ய உத்தரவு கொடுக்கப் பட்டிருப்பதாகப் பிரதம மந்திரி அவர்கள், மாகாண உணவுப்பொருள் ஆலோசனைக் கமிட்டிக் கூட்டத்தின் பிரசங்கத்தில் சொல்லியிருப்பதாய், செய்தி வெளியாகியிருக்கிறது. இது விஷயம் அதிகாரிகளைக் கேட்டதில் தங்களுக்கு அம்மாதிரி உத்தரவு ஒன்றும் கிடையாது என்று சொல்லுகிறார்கள்.

இம்மாதிரிக் கஷ்டங்களுக்கு விவசாயிகள் உட்படாமலிருக்கப் பங்கீட்டு முறை அடியோடு ஒழியவேண்டும். அல்லது ''லெவி'' முறையாவது அமுலுக்கு வரவேண்டும்.

கொடுமுடி.
25—10—49 வேங்கடசுப்பிரமண்யம்

○●○

## கட்டுப்படுத்த வேண்டும்

இப்போது சில காலமாய்க் கோவில் உற்சவங்களிலும், வீடுகளில் நடைபெறும் ஒவ்வொரு சுப சோபனங்களிலும், ஏன், நவராத்திரி கொலு வைத்தாலும்கூட ஒலி பெருக்கிகள் தாராளமாய்க் கையாளப் படுகின்றன.

அநேகமாகக் காலை 7 மணி முதல் இரவு 12 மணி வரை சுமார் 40, 50 இசைத் தட்டுகளைத் திருப்பித் திருப்பி வைப்பதால் கோவில் கோபுரங்கள் வீட்டு மாடிகள் போன்ற உயர்ந்த இடங்களில் பொருத்தப் பட்டிருக்கும் ஒலி பெருக்கிகள் ஊர் முழுவதும் கேட்கும்படி ஊளையிட்டு அலற ஆரம்பித்து விடுகின்றன. ஒரு பள்ளிக்கூடத்துக்குச் சமீபத்தில் இம்மாதிரி ஒலி பெருக்கியானது அலறிக் குமுற ஆரம்பித்து விட்டால் பள்ளிப் பிள்ளைகள் படித்து உருப்படுவது எப்படி?

ஆகவே, இந்த ஒலி பெருக்கிகளின் துர்விநியோகங்களை இப்போது கட்டுப்படுத்த வேண்டும். பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள், தேவாலயங்கள் இவைகளுக்குச் சமீபத்தில் ஒலி பெருக்கிகளின் வசதிகளை யாரும் எக்காரணத்தைக் கொண்டும் உபயோகிக்கக் கூடாது.

அவரவர்கள் வீட்டிலோ அல்லது பொது ஸ்தாபனங்களிலோ ஆங்காங்கு உள்ளவர்கள் மட்டும் கேட்கக் கூடிய அளவில் 'இசைத் தட்டுகளையோ' 'ஸங்கீதத்தையோ' 'ரேடியோ மகா தேவரையோ' அனுபவிப்பதில் எவரும் குற்றங்கூற முடியாது. ஆனால் அங்கு நடப்பதை எல்லோரும் கேட்கத்தான் வேண்டுமென்று, அளவுக்கு மீறி ஒலியைப் பரப்பி நிர்ப்பந்திப்பதில் அர்த்தமேயில்லை. இந்த சாதனங்கள் தங்கள் வீடுகளில் இல்லாத ஏழைகள் ஆங்காங்கு பார்க்குகளில் உள்ள ரேடியோக்கள் மூலம் ஒன்றிரண்டு மணி நேரம் உல்லாசமாகப் பொழுது போக்கலாம். டிக்கட்டுகள் மூலம் வசூல் செய்யும் சினிமா, நாடகம், ஸங்கீதக் கச்சேரிகள் போன்றவை

## சர்க்கரைப் பஞ்சத்திலே!



முதல்வர் :—என்ன ஸார்! இராத்திரி வேளையிலே இந்த வேஷத்தோடு எங்கே கிளம்பினீர்கள்?

இரண்டாமவர் :—உமக்கு விஷயம் தெரியாதா? நம்ம முருகன் ஸ்டோரில் நாளைக்குக் காலையில் ஆறு மணிக்குச் சர்க்கரை கொடுக்கிறார்களாம்!

களுக்கு ஏற்கெனவே தமாஷ் வரி விதித்திருப்பதால் அதைப் போலவே இந்த ஒலி பரப்பிகளுக்கும் வரி விதிப்பதில் எவ்வித ஆட்சேபணையுமிராது. அல்லது வரிக்குப் பயந்தாவது ஒலி பெருக்கிகளைத் துர்விநியோகம் செய்யாமலிருப்பார்களல்லவா?

மேலே கண்டபடி ஒலிபெருக்கிகளின் துர்விநியோகங்களைக் கட்டுப்படுத்தும் வகையில் அதிகாரிகள் ஏதாவது பரிகாரந் தேடாதவரையில் சிறிய ஊர் அல்லது பட்டணங்களில் உள்ள அநேகர் கூடிய சீக்கிரத்தில் கால் செவிடு, அரை செவிடு, முக்கால் செவிடுகளாய்ப் போவதுடன் அதிர் வேட்டு வெடித்தாலும் "அங்கே என்ன புகைச்சல்?" என்று கேட்கும் நிலைமைக்கு வந்து விடுவார்கள்.

தஞ்சாவூர்
15—10—49 பி. துரையப்ப பாகவதர்

○●○

## உற்பத்தி பெருகுமா?

இந்தப் பசலியில் நான் சுமார் 200 ஏக்கர் வரை நெல் சாகுபடி செய்திருக்கிறேன். இவைகளில் பெரும்பாலும் நான் சொந்தப் பண்ணையாக மாதச் சம்பள ஆட்களை வைத்துக்கொண்டு நடத்தி வருகிறேன். இதனால் எனக்கு அடியில் கண்ட விவரப்படி மாதம் ஒன்றுக்கு 37 கலம் நெல் செலவாகிறது. சென்ற கோடை (ஜூன் மாதம்) அறுவடையில் நான் சர்க்கார் கணக்குக்கு மேல் சுமார்

2 மடங்கு நெல் அதிகமாக சர்க்காருக்குக் கொடுத்திருக்கிறேன். அப்போது என்னுடைய மாதச் சம்பள ஆட்களுக்கு 3 மாதத்திற்கு மட்டும் செப்டம்பர் கடைசி வரை நெல்லை நிறுத்தி வைத்திருந்தேன்.

எதிர்பார்த்தபடி வாய்க்கால்களில் தண்ணீர் வராமல் ஆகஸ்டு 1ந் தேதி தண்ணீர் வந்தபடியால் குறுவை சாகுபடி செய்வதற்கு அதிக வசதி இல்லாமல் போயிற்று. இதனால் அக்டோபரிலும் நவம்பர் 15 தேதி வரைக்கும் நடக்கும் என் விவசாயத்திற்குச் சம்பள ஆட்களுக்குக் கொடுப்பதற்குக் கையிருப்பில் நெல் இல்லாமல் போகவே வேறு வழி யில்லாமல் மிகுந்த விலை கொடுத்து ஏராளமான நாற்றைப் பத்து மைல் தூரத்திலுள்ள ஊர்களிலிருந்து விலைக்கு வாங்கி 6 ஏக்கர் நிலத்தில் மிகுந்த பிரயாசையின் பேரில் நடவு செய்தேன். இதைத் தவிர எனக்குச் சொந்தமான 5 கிராமங்களிலுள்ள நிலங்களில் ஒரு சென்டு நிலம்கூட குறுவை சாகுபடி செய்யவில்லை.

சென்ற வாரம் இதில் விளைந்த அற்ப விளைச்சலான 35 கல நெல்லையும் அறுவடையானவுடன் என் 'ஸ்டாக்' நிலைமையை விளக்கி அதிகாரிகளுக்கு எழுத்து மூலம் தெரிவித்துக் கொண்டேன். அவர்களும் சோதனை போட்டு என்னுடைய ஸ்டேட்டுமெண்டின் உண்மையைத் தெரிந்துகொண்ட பிறகும் எனக்கு யாதொரு முன் எச்சரிக்கையும் கொடுக்காமலும் "உ" நோட்டீஸ் கூட 'சர்வ்' செய்யாமலும் நான் இல்லாத சமயத்தில் எப். எஸ். ஓ. என் வீட்டில் நுழைந்து பூட்டை உடைத்துப் பலாத்காரமாகக் கிராம அதிகாரியைக் கூட வைத்துக் கொள்ளாமல் பறிமுதல் செய்திருக்கிறார். இந்தச் செய்கையினால் என்னுடைய சம்பள ஆட்களை உடனே நிறுத்திவிட்டு சீர்திருத்தம் செய்து சாகுபடி ஆக வேண்டியிருக்கும் 30 காணி நிலங்களையும் தரிசாகப் போடவேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

அதிகாரிகள் இப்படி நடந்து கொண்டால் உற்பத்தியை எப்படிப் பெருக்கமுடியும்?

நங்கவரம்
24—10—49 அகஸ்டேஸ்வர்



## மலை வாழ்வு

எங்கள் ஊர் பந்திமலை கொடைக்கானலிலிருந்து வடகிழக்கில் உள்ளது. இந்தக் கிராமம் திண்டுக்கல் தாலுகாவைச் சேர்ந்தது. இதில் சுமார் 3,500 ஜனங்கள் வசிக்கிறார்கள். சுமார் 250 மிராசுதார்கள், 50 ஏக்கருக்குச் சற்று அதிகமான வாழை, காப்பி, ஏலம், ஆரஞ்சு உள்ள நிலங்கள் வைத்திருக்கிறார்கள். 300 பேர்கள் வரை 50 ஏக்கருக்குக் குறைவான, மேலே குறிப்பிட்டுள்ள, மகசூல் கிடைக்கக் கூடிய நிலங்கள் வைத்திருக்கிறார்கள். பாக்கி ஜனங்கள் பரம ஏழைகள். இதில் பெரும்பாலும் நாட்டிலிருந்து இங்கு கூலி வேலை செய்து பிழைக்க வந்தவர்கள். இங்கு வாழை, காப்பி, இஞ்சி, ஏலம் இன்னும் இதர பழ வர்க்கங்களும் ஏராளமாக உற்பத்தி செய்யப்படுகின்றன.

மலையில் இருந்து அடிவாரம் ஆறு மைல் உள்ளது. இந்த ஆறு மைலுக்கும் நடந்து தான் கஷ்டப்படவேண்டியிருக்கிறது. மலையின் விளையும் விலை பொருள்கள் முழுவதும் மனிதர் தலைச்சுமையாகத்தான் அடிவாரத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் குளிரும், வாடைக் காற்றும் அதிகமாக வீசும். அந்த மாதங்களில் "மலை ஜுரம்" ஏற்படுவது சகஜமாக இருந்து வருகிறது. ஜுரத்தைப் போக்கடிக்க ஒரு ஆஸ்பத்திரியோ, நல்ல வைத்தியர்களோ கிடையாது. மலை ஜுரம் ஏற்பட்டால் திண்டுக்கல் ஆஸ்பத்திரிக்குப் போய்த்தான் சிகிச்சை பெறவேண்டும். ஆகையால் எங்களுக்கு மேலே குறிப்பிட்ட ஆறு மைல்களுக்கு வண்டிப் போக்குவரத்துள்ள ரோடு, ஒன்றும், சர்க்கார் ஆஸ்பத்திரி ஒன்றும் மிகவும் அவசியமாக இருக்கிறது.

இது சம்பந்தமாக நாங்கள் எவ்வளவோ எழுதியும் எங்கள் விஷயத்தில் சர்க்கார் கவலை செலுத்தாததின் காரணமென்ன? இங்குள்ள நிலங்களுக்கு மலைப் பிரதேசம் என்று நிலத் தீர்வை வசூல் செய்யாமல் விட்டுவிடுகிறார்களா? மலையில் விளையும் 'காப்பி'தானே என்று 'கண்ட்ரோல்' போடாமல் விட்டு விட்டார்களா? இல்லையே!

நாங்கள் மலைமேல் வாழும் வன விலங்குகளைப் போல்தான் வாழ்ந்து வருகிறோம். எங்கள் குறைகளைச் சர்க்கார் கவனித்துப் பரிகாரம் செய்வார்களா?

பந்திமலை
5—11—49 ப. குழந்தைவேலு



## பெற்றவனுக்குத்தான் பிள்ளை

"ஏ ஆந்திர மாகாணமே! நீ என்ன கூறுகிறாய்? உனக்கு ஏன் இவ்வளவு ஆசை? 'வளர்த்த கடா மார்பில் பாய்வது போலவும், நிற்க இடம் கொடுத்தால் படுக்க இடம் கேட்பது போலவு மன்றோ' இருக்கிறது உன் எண்ணம்! மேலும் நீ, நீதி கூறுவோர்களின் கூற்றையும் நிராகரிக்கின்றாயே! யான் பெற்று வளர்த்து பேரழகுக் கன்னியாக ஆக்கிய சென்னை என்னுடையதன்றோ? மேலும் வேறொரு பிள்ளையைத் தன் பிள்ளை என்று கூறி, அதன் சொந்தத் தாயுடன் வழக்குத் தொடர்ந்தும் இவ்விபரீதமான வழக்கைக் கண்ட நீதிபதி "குழந்தையை இரு துண்டாக்கலாம்" என்றதற்கு "ஆகட்டும், குழந்தை சாகட்டும்; அவளும் சீர்கெட்டுப் போகட்டும்" என்று எவளோ ஒருத்தி கூறினளாம்! அது போலவன்றோ இருக்கின்றது — சென்னையை எனக்குக் கொடு அல்லது இரு துண்டாக்கு என்பது! பேசாமல் பேராசையைவிடுத்து உன் தொழிலை நீ பார். கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே என்பதை ஆர அமரச் சற்று சிந்தித்துப் பார். பிறர் பெண்ணுக்கு ஆசைப்பட்ட இராவணன், மாற்றான் சொத்துக்கு மல் நடத்திய துரியோதனன் என்ன ஆனார்கள் என்பதை ஆய்ந்து ஆலோசிப்பாயாக! தமிழர் கலாசாரம் நிறைந்த சென்னை உனக்கு எப்படிச் சொந்தமாகும்? நீ பெற்று வளர்த்த குழந்தையானால் உன் அம்சம், உன் பழக்க வழக்கங்கள் ஏதாவது பொருந்தியிராதா? தேசப் பெரியவர்களான மூவர் கமிட்டியை ஏசுவது என்ன நினைந்து? ஏதோ அண்டை வீட்டுக்காரி துயரடைந்தால் நமக்கும் சரிந்துதானே என்று நம்புகிறேன். இதிலிருந்து என் அன்பு எந்தளவாது உனக்கு புலப்படுகிறதல்லவா? "பகைவர்களையும் பாராட்டும் தன்மை தமிழரின் பண்பு" என்று தமிழ் கலாசாரம் உரைக்கிறது.

மதுரை
6—11—49 கோபால்

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ '[illegible]' என்ற கடிதம் எழுதிய ஸ்ரீமதி சீதாவுக்கும், '[illegible] சாக வேண்டியதுதானா?' என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ பி. என். கவுண்டையாவுக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.



# அந்தக் குரல்



வேங்கடலட்சுமி

மணியம்.

ஜன்னலண்டை நின்றபடி ஈரக் கூந்தலை விரல்களால் ஆற்றிக் கொண்டிருந்தாள் பாக்கியலட்சுமி. தனக்குப் பின்னால் கனைப்புச் சத்தம் கேட்கவே, அவள் சட்டென்று திரும்பிப் பார்த்தாள்.

அறை வாசற்படியில் நின்று கொண்டிருந்த ஐயாத்துரை அவளைச் சங்கோசத்துடன் நோக்கி, "சமையற்கார அம்மாள் எங்கே? வீட்டில் இல்லையா?" என்று தயக்கத்துடன் கேட்டான்.

அவன் கேட்டதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டாள் பாக்கியலட்சுமி. அவனுடைய சங்கோசம் அவளுக்கு வேடிக்கையாயிருந்தது. இரண்டு வருஷங்களாக அதே வீட்டிலிருந்தும், அவன் இதுவரை அவளிடம் நேரிடையாகப் பேசியதேயில்லை. தன் தகப்பனாரிடமோ அல்லது நீண்டகாலமாக அவ் வீட்டில் வேலை செய்து வந்த சமையற்கார அம்மாளிடமோ, தனக்கு வேண்டியதைக் கேட்டு வாங்கிக் கொள்ளுவான். எதிர்பாராவிதமாகப் பாக்கிய லட்சுமியை வீட்டுக்குள்ளேயே எங்காவது சந்தித்தாலும் தலையைக் குனிந்து கொண்டு போய் விடுவான். அவளும் வலிய அவனிடம் சென்று பேசியதில்லை. இப்பொழுது அவளுக்குப் பேச வேண்டிய பிரமேயம் நேர்ந்து விட்டது. அவள் விரிந்து கிடந்த கூந்தலைச் சேர்த்துக்



கட்டியபடி, "சமையற்கார அம்மாள் தன்னுடைய உறவினர் வீட்டுக்குப் போயிருக்கிறாள். சாயங்காலம் திரும்பி வருவாள். உங்களுக்குச் சாப்பாடுதானே வேண்டும்?—சாப்பிட வாருங்கள்; நான் சாதம் போடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே, அவனுடைய பதிலை எதிர்பாராமல் சமையலறைக்குள் நுழைந்தாள்.

ஐயாத்துரைக்கு என்னவோ போலிருந்தது. இருந்தாலும் முற்றத்துக் குழாயண்டை போய்க் கை கால்களைக் கழுவிக் கொண்டு சாப்பிடப் போனான். அதற்குள் வெள்ளித் தட்டை அலம்பி வைத்து, தண்ணீர் முதலியவைகளை யெல்லாம் தயாராய் எடுத்து வைத்திருந்தாள் பாக்கியலட்சுமி.

தலை குனிந்தபடியே சாப்பாட்டுக்கு உட்கார்ந்தான் ஐயாத்துரை. சாதம், கறிவகைகளைப் பரிமாறி விட்டுக் குழம்பு எடுத்துக் கொண்டு வருவதற்காக அடுப்பண்டை போனாள் பாக்கியலட்சுமி.

ரோஜாப் புஷ்பங்கள் போன்ற அவளுடைய சிவந்த கன்னங்களில், காதுகளில் அணிந்திருந்த வைரக் கம்மல்கள் நிழல் ஆடின. அதைக் கண்ட ஐயாத்துரையின் மனதில் அதுவரை எத்தனையோ தரம் உதித்திருந்த அந்த கேள்வி மீண்டும் உதித்தது. "சித்திரத்தில் கூடக் காண முடியாத இவ்

வளவு அழகிய பெண்ணை ஐம்பத்து மூன்று வயதான நம் அப்பா கல்யாணம் செய்து கொண்டு ஏன் பாவத்தைக் கட்டிக் கொள்ளனும்? இந்த அக்கிரமத்தைக் கேட்பார் இல்லையா?" என்று எண்ணி ஏங்கியது அவன் உள்ளம்.

அவனருகில் வந்து தட்டில் குழம்பை ஊற்றிவிட்டுச் சற்று எட்டப்போய் நின்றாள் பாக்கியலட்சுமி. அவன் சங்கோசப்படுவதை அவள் அறியாமலில்லை.

ஐந்து நிமிஷத்தில் தட்டில் இருந்ததைச் சாப்பிட்டு முடித்துவிட்டு, "கொஞ்சம் மோர் மட்டும் போதும்; வேறொன்றும் வேண்டாம்" என்று தலை குனிந்தபடியே சொன்னான் ஐயாத்துரை.

"நன்றாயிருக்கிறது! இன்னும் கொஞ்சம் சாதம் போட்டுக் கொள்ளுங்கள்; முதலிலேயே கொஞ்சம்தானே வைத்தேன்?" என்று உரிமையோடு சொல்லிக்கொண்டே சாதத்தை எடுத்து வந்தாள் பாக்கியலட்சுமி. அவள் குரலில் தொனித்த குழைவு அவனை ஒரு விநாடி என்னவோ செய்தது. தன்னையறியாமல் நிமிர்ந்து அவள் முகத்தைப் பார்த்தான். அதே விநாடி சொல்லி வைத்தாற்போல் அவள் விழிகளும் அவன் விழிகளைச் சந்தித்தன. அவள் நெஞ்சம் அவளையும் அறியாமல் ஒரு கணம் விம்மித் தணிந்தது.



* * *

இந்தச் சமயத்தில் தாளிடாமல் சாத்தி வைக்கப்பட்டிருந்த கதவு படீரெனத் திறந்தது. பாக்கியலட்சுமி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அவ்வளவுதான்; அவள் கையில் இருந்த தட்டு 'படீ'ரெனக் கீழே விழுந்தது. அதிலிருந்த சாதமெல்லாம் நாலாபுறமும் சிதறின. ஐயாத்துரை 'என்ன நேரிடுமோ!' என்று திகில் அடைந்தான்.

உள்ளே நுழைந்தவர் அவள் தகப்பனார் பஞ்சாபகேசய்யர். வெய்யிலுக்காகப் பிடித்து வந்த குடையை மூடி மூலையில் வைத்துவிட்டு அவர் ஊஞ்சலில் உட்கார்ந்தார்.

ஐயாத்துரைக்கு மோர் விட்டுவிட்டுத் தரையில் சிதறியிருந்த சாதத்தை யெல்லாம் அள்ளிக் கொண்டிருந்தாள் பாக்கியலட்சுமி. ஏதோ குற்றம் செய்தவனுடைய நெஞ்சம் போல அவனுடைய நெஞ்சம் படபட வென்று அடித்துக்கொண்டிருந்தது.

ஐயாத்துரை அவசர அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு மாடிக்குப் போய்விட்டான். தகப்பனாரை அவன் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

"பாக்கியம்! கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா!" என்றார் பஞ்சாபகேசய்யர். லோட்டாவில் தண்ணீரை எடுத்துக் கொண்டு போய் அவருக்குப் பக்கத்தில் வைத்தாள் அவள்.

அதை எடுத்துக் குடித்து விட்டு, "சேஷம்மா எங்கே போனாள்?" என்று கேட்டார் பஞ்சாபகேசய்யர். அவருடைய குரல் ஒரு தினுசாக மாறியிருந்ததைப் பாக்கியலட்சுமி உணராமலில்லை.

"பக்கத்துத் தெருவில் அவளுடைய உறவினர் வீட்டிலே யாரோ காயலா யிருக்கிறார்களாம்; பார்க்கப் போயிருக்கிறாள்" என்றாள் பாக்கியலட்சுமி.

"ஐயாத்துரைக்குச் சாதம் போட்டு விட்டுப் போகச் சொல்லக் கூடாதோ?" என்றார் பஞ்சாபகேசய்யர்.

இதைக் கேட்டதும் அவருடைய முகத்தை வெறித்துப் பார்த்தாள் பாக்கியலட்சுமி. அவளுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. அதைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, "ஏன், நான் சாதம் போட்டால் என்ன?" என்று கேட்டுவிட்டாள்.

பஞ்சாபகேசய்யரின் முகம் இந்தப் பதிலைக் கேட்டதும் பயங்கரமாய் மாறியது. சட்டென்று ஊஞ்சலை விட்டு எழுந்தார்.

அடுத்த கணம் பாக்கியலட்சுமியின் கன்னத்தில் 'பளீ' ரென்று ஒரு அறை விழுந்தது. அவ்வளவுதான்; கண்முன்னால் எல்லாம் இருண்டு வருவது போன்ற பிரமை தோன்றியது அவளுக்கு. அப்படியே கன்னத்தைப் பிடித்துக் கொண்டு விட்டாள். அதற்குப் பிறகு பஞ்சாபகேசய்யர் அங்கே நிற்கவில்லை; விடுவிடென்று மாடிக்குப் போனார்.

அதற்குள் பாக்கியலட்சுமி சற்றுச் சமாளித்துக் கொண்டு மாடிப்படிகளண்டை போய் நின்றாள். உரத்த குரலில் பஞ்சாபகேசய்யர் ஐயாத்துரையிடம் ஏதோ கூறுவது காதில் விழுந்தது. விவரமாய் ஒன்றும் புரியவில்லை. மகனிடம் கிழவர் சண்டை போடுகிறாரென்று மட்டும் தெரிந்து கொண்டாள். அவளுக்குத் துக்கம் நெஞ்சையடைத்தது.

சற்றுப் பொறுத்து வாசலில் வண்டி வந்து நின்ற சத்தம் கேட்டு மெதுவாக எட்டிப் பார்த்தாள் பாக்கியலட்சுமி. வண்டிக்காரன் மாடிக்குப் போய் இரண்டு பெட்டிகளையும் ஒரு படுக்கையையும் கொண்டு வந்து வண்டியில் வைத்தான். அவன் பின்னாலேயே இறங்கி வந்தான் ஐயாத்துரை. ஒரு பக்கமும் திரும்பவே இல்லை அவன். நேராகக் கூடத்தில் மாட்டியிருந்த தன் தாயின் படத்தண்டை வந்து நமஸ்கரித்துவிட்டு வாசலுக்குப் போய்விட்டான்.

"செலவுக்குப் பணம் வாங்கிக் கொள்ளேண்டா!" என்றார் கிழவர்.

"வேண்டாம்!" என்று ஒரே வார்த்தையில் பதில் கூறி விட்டு வண்டியிலே ஏறி விட்டான் ஐயாத்துரை. அப்பொழுது உள்புறம் நோக்கிய அவன் பார்வை சமையலறைக் கதவு மூலையில் சிலைபோல் நின்று கொண்டிருந்த பாக்கியலட்சுமியின் மேல் விழுந்தது. சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு வறண்ட குரலில், "சீக்கிரம் வண்டியை விடடா! ரயிலுக்கு நேரமாய் விட்டது" என்றான் ஐயாத்துரை.

## 2

ஐந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்ததாயினும் பாக்கியலட்சுமியின் நெஞ்சில் இந்தச் சம்பவம் அன்று நடந்தது போல் ஞாபகமிருந்தது. ரதியைப் போன்ற அழகு வாய்ந்த பெண்ணை மணந்து கொள்ளும் கிழவர்களின் நெஞ்சில் சந்தேக விதை ஊன்றி விட்டால், அதற்குப் பிறகு பிள்ளை, பெண் என்ற பகுத்தறிவுகூட மழுங்கிவிடுமென்பதை அவள் உணர்ந்தாள். தன்னைச் சிருஷ்டித்த கடவுள் பிறர் அறிவை மயக்கும் அழகைத் தனக்குக் கொடுத்து, அதுடன் வறுமை மிகுந்த ஒரு பெரும் குடும்பத்தில் தன்னைப் பிறக்க வைப்பானேன்? இல்லாவிட்டால் ஒரு கிழவருக்குத் தான் ஏன் மூன்றாவது தாரமாக வாழ்க்கைப்பட நேரிடுகிறது? இப்படியெல்லாம் கஷ்டப்படத்தான் என்ன இருந்திருக்கப் போகிறது? கண்ணுக்குக் கண்ணான தன் ஒரே பிள்ளையை அற்ப காரணத்துக்காக வீட்டை விட்டே துரத்தி விட்டாரே கிழவர்! இந்தப் பாவத்தை யார் கட்டிக் கொள்வது? இப்படியெல்லாம் எண்ணி எண்ணிப் பல தினங்கள் வரை ஏங்கினாள் பாக்கியலட்சுமி. வீட்டை விட்டுச் சென்ற ஐயாத்துரையிடமிருந்து ஒரு தகவலும் இல்லை. எங்கே போனான், என்ன செய்கிறான் என்பது ஒருவருக்குமே தெரியாது.

கிழவர் அவனைக் குறித்த பேச்சையே எடுப்பதில்லை. ஆனால் அவனைப் பற்றித் தகவல் அறிவதற்கு அவர் எவ்வளவோ முயற்சிகள் செய்கிறாரென்பது மட்டும்



பாக்கிய லட்சுமிக்குத் தெரிந்தது.

இதற்கிடையில் ஊர் வாய் சும்மா இருக்குமா? "இனி யாருக்காகப் பரிந்து கொண்டு பெற்ற பிள்ளையைக் கூட வீட்டை விட்டுத் துரத்தி விட்டார் இவர்!" என்று அவர்கள் பழியைப் பாக்கிய லட்சுமியின்மீது சுமத்தினர். இதனையெல்லாம் ஒன்றுமே பிடிக்காமல் நாளைக் கடத்தி வந்தாள் பாக்கியலட்சுமி.



ஐந்து, ஆறு என்று பத்து வருஷங்கள் ஓடி விட்டன. பாக்கிய லட்சுமிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு அடுத்த வருஷமே பஞ்சாபகேசய்யர் தம்முடைய சொந்த ஊரான கும்பகோணத்துக்கே வந்து விட்டார். வயது ஏற ஏற மகனைக் குறித்த சபலம் அடிக்கடி அவர் மனதில் தோன்றியது. ஆனாலும் அவர் தம் உள்ளக் குமுறலை யாரிடமும் சொல்வதில்லை.

## 3

அன்று ஆடிக் கிருத்திகை. கோவில் வாசலில் ஏகக் கூட்டம். கையில் வைத்துக் கொண்டிருந்த ஒரு புஷ்பப் பொட்டணத்துடன் கூட்டத்துக்கு நடுவே சுமார் எட்டு வயதுடைய பெண் குழந்தையொன்று அழுது கொண்டிருந்தது.

"யார் வீட்டுக் குழந்தையோ?" என்று விசாரித்தார்கள் இரண்டொருவர். ஆனால் அவர்கள் அந்தக் குழந்தையை நெருங்கவோ, அதை அதனுடைய பெற்றோர்களிடம் சேர்ப்பிக்கவோ முயலவில்லை.

குழந்தை தேம்பித் தேம்பியழுதபடி தன் பாவாடையால் கண்களைத் துடைத்துக் கொண்டும் நாலாபுறமும் மருண்டு மருண்டு பார்த்துக் கொண்டும் இருந்தது.

"ஏன் அம்மா அழுகிறாய்?" என்ற பரிவு நிரம்பிய குரல் கேட்டுச் சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள் குழந்தை.

வெண்மையான உடுப்பணிந்த ஒருவர் மெதுவாக அக்குழந்தையின் முகத்தை நிமிர்த்திக் கண்களைத் துடைத்தார்.

"வந்து,—வந்து,— நான் வீட்டுக்குப் போகணும்;— இருட்டிப் போயிடுத்து!" என்று விம்மினாள் குழந்தை.

"நான் அழைத்துக் கொண்டு போகிறேன், வா! பயப்படாதே; உங்க வீடு எங்கிருக்கு? சொல்லத் தெரியுமா?" என்று கேட்டுக் கொண்டே அவளுடைய கையிலிருந்த புஷ்பப் பொட்டணத்தை வாங்கிக் கொண்டு இன்னொரு கையால் அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டார் அந்த மனிதர்.

பயத்தினால் அரண்டிருந்த குழந்தையின் முகம் சட்டென்று தெளிவடைந்தது. உரிமையுடன் அவருடைய கையைப் பிடித்துக் கொண்டு, "ஓ! நன்னாத் தெரியுமே! அரச மரத்தடிப் பிள்ளையார் கோயில் தெரு; எங்க வீட்டு வாசல்லே பெரிய பன்னீர் மரம் கூட இருக்கு; அதிலே எத்தனை கொத்துக் கொத்தாப் பூ இருக்கு. தெரியுமோ?" என்று குழந்தைகளின் இயற்கைப்படி அவள் கலகலவென்று பேசினாள்.

அவளுடைய பேச்சில் மனதைப் பறி கொடுத்த அந்த மனிதர் சிரித்துக் கொண்டே, "உன் பெயர் என்ன பாப்பா? அதை நீ சொல்லவேயில்லையே!" என்று கேட்டார்.

"என் பெயர் ராஜாத்தி. எங்க அம்மா மட்டும் என்னை ராஜம்னு கூப்பிடுவா!" என்று சொல்லி விட்டுக் கன்னம் குழியிட அவரை நோக்கிக் கலீரென்று சிரித்தாள் குழந்தை.

"இந்தப் பெரிய கண்களையும் ரோஜாப் பூக் கன்னங்களையும் நாம் எங்கே பார்த்திருக்கிறோம்?" என்று யோசித்தபடியே அவளுடன் நடக்கலானார் அவர்.

சுமார் பத்து நிமிஷம் நடந்த பின்பு ஒரு பெரிய வீட்டு வாசலில் நின்றாள் ராஜாத்தி. அவளுக்குக் குதூகலம் தாங்க முடியவில்லை. "இதுதான் மாமா, எங்க வீடு!" என்று தெரிவித்தபடி தன் கையை விடுவித்துக்கொண்டு சாத்தி வைக்கப் பட்டிருந்த 'கேட்'டண்டை ஓடினாள்.

வாசலில் தழைத்திருந்த பன்னீர் மரத்திலிருந்து மலர்ந்த அரும்புகளின் பரிமளம் இருளில் கலந்து, தவழ்ந்து வந்தது. "அம்மா! அம்மா! நான் வந்தூட்டேன்! இந்த மாமா என்னை அழைச்சுண்டு வந்தார்! கதவைத் திற, அம்மா!" என்று தன்னுடைய கீச்சுக் குரலில் கூவினாள் குழந்தை.

உள்ளே யிருந்து வேகமாய் வெளியே வந்தாள் ஒரு ஸ்திரீ. "அடி என் ராஜாத்தி! எங்கே அம்மா போய் விட்டே? உன்னைத் தேடிக் கொண்டுவர வீரப்பனை அனுப்பி விட்டு வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டே அவள் 'கேட்'டைத் திறந்தாள்.

ஓடிப் போய்த் தன் தாயண்டை நின்று கொண்ட குழந்தை. "இதோ, இந்த மாமாதான் அம்மா என்னை அழைத்து வந்தார்!" என்று 'கேட்'டுக்கு வெளியே நின்று கொண்டிருந்தவரைச் சுட்டிக் காட்டினாள்.

"வாருங்கள்! இவளுடைய அப்பா உள்ளே யிருக்கிறார். வெளியே விளையாடப் போன குழந்தை இன்னும் வரவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். நல்ல வேளை; நீங்கள் சமயத்தில் அவளை அழைத்துக் கொண்டு வந்து விட்டீர்கள்!" என்று நன்றியறிதலோடு உள்ளே போகத் திரும்பினாள் ராஜத்தின் தாயார்.

"ஐயோ! இந்தக் குரல்! இந்தப் பரிவு! இதென்ன விபரீதம்? என்னென்னவோ விஷயங்களெல்லாம் ஞாபகத்துக்கு வருகின்றனவே!" என்று எண்ணியபடியே தயங்கியவண்ணம் அவர்கள் பின்னால் நுழைந்தார் அவர்.

வீடு பெரிய தோரணையில் இருந்தது. நல்ல செல்வாக்கையும் அந்தஸ்தையும் அது காட்டிக் கொண்டிருந்தது. கூடத்தில் பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்த விளக்கருகில் ஒரு சாய்வு நாற்காலி இருந்தது. அதில் சாய்ந்து கொண்டிருந்தார் ஒரு கிழவர்.

வெளியே பேச்சுக்குரல் கேட்டு வாசல் புறம் நோக்கிய அவர், "ராஜாத்தி! எங்கே போய் விட்டே இவ்வளவு நாழிகை? அது யார் உன்னோடே வருகிறது?" என்று கேட்டார். பிறகு மூக்குக் கண்ணாடியைக் கழற்றிச் சரிப்படுத்தியபடி அவளுடன் வந்தவரைக் கூர்ந்து பார்த்தார். அடுத்த கணம் துள்ளியெழுந்து அளவற்ற உணர்ச்சியுடன், "யார், அது? ஐயாத்துரையாடா! பத்து வருஷமா என்னைத் தவிக்கவிட்டு விட்டு நீ எங்கேடா போய் விட்டே? என் அப்பா!" என்று கூவியபடியே வந்தவரை நோக்கி ஆவலுடன் பாய்ந்தோடினார்.

"அப்பா!" என்று அலறியபடியே அவரைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு கண்ணீர் உகுத்தான் ஐயாத்துரை.

"பாக்கியம்! பாக்கியம்! உனக்குத் தெரியவில்லையா? நம்ம ஐயாத்துரையடி!—ராஜாத்தி! உன் அண்ணாவடி!" என்று மகளையும் மனைவியையும் நோக்கிக் கன்னத்தில் மாலை மாலையாய்க் கண்ணீர் வழியச் சொன்னார் கிழவர்.

ஐயாத்துரையைத் தனது அகன்ற விழிகளால் நோக்கியபடி சிலைபோல நின்று விட்டாள் பாக்கியலட்சுமி. பத்து வருஷங்களுக்கு முன்பாக நடந்த சம்பவங்கள் மின்னல்போல் அவள் அகக் கண்ணில் மின்னி மறைந்தன. குழந்தை ராஜாத்தியோ அவர்கள் மூவரையும் ஆச்சரியத்துடன் மாறி மாறிப் பார்த்தாள்.

* * *

சற்றுப் பொறுத்து எல்லோருக்கும் கூடத்தில் சாப்பாடு பரிமாறிக் கொண்டிருந்தாள் பாக்கியலட்சுமி. அப்பொழுது ராஜம், "என் அண்ணா! இனிமேல் நீ இங்கேதானே இருப்பே?" என்று கேட்டாள். ஐயாத்துரையும் கிழவரும் சிரித்தார்கள். பாக்கியலட்சுமியின் முகம் விச்சலனமாயிருந்தது.






கடவுளைப் படைத்தது யார்? இது என்ன பயங்கரமான கேள்வி? இந்தக் கேள்வி கேட்க எவ்வளவு துணிச்சல் வேண்டும்? ஜனத்திரளிடையே சிறிது சலசலப்பு ஏற்பட்டது. குமாரகிரி அதே சாந்தமான குரலில், "கடவுள் ஆதியந்தம் அற்றவர். அநாதி காலம் தொட்டு வாழ்பவர்" என்று பதில் சொன்னான்.

"யோகி! கடவுள் ஆதியந்தம் அற்றவர். அநாதி காலந்தொட்டு வாழ்பவர் என்று சொன்னீர்களே, அது ரொம்ப சரியான வார்த்தைதான். ஆனால் நீங்கள் சொன்னது ஒன்றும் புதிதான விஷயம் அல்ல. கடவுள் காலவரையறைக்கு அப்பாற்பட்டவர். அநாதி காலந்தொட்டு வாழ்பவர் என்று ஒவ்வொரு மனிதனும்தான் சொல்லுகிறான். ஆனால் நான் கேட்கிறேன், நீங்கள் அந்த ஈசுவரனைப் பார்த்திருக்கிறீர்களா? இந்த மண்டபத்திலே வீற்றிருக்கும் இத்தனை பேர்களில் வேறு யாராவது பார்த்திருக்கிறார்களா?" என்று கேட்டார் சாணக்கியர்.

அவருடைய குரலிலே கம்பீரம் தொனித்தது; கண்களிலே ஒளி வீசியது. பிறர் பதில் சொல்வதற்காக அவர் காத்திருக்கவில்லை. அடுத்த கணமே, "ஆம், ஈசுவரன் ஆதியந்தம் அற்றவன்; அநாதி காலந் தொட்டு வாழ்பவன்தான். ஆனால் அந்தக் கடவுளை எவனும் அறியான். எவனுமே பார்த்ததில்லை என்றுகூட நான் திட்டமாகக் கூறுவேன். எந்தக் கோவிலிலே வேண்டுமானாலும் ஏறி நான் சத்தியம் செய்யத் தயார். அவன் கற்பனைக்கு அப்பாற்பட்டவன். அவன் நித்தியமானவன்; சத்தியமானவன். ஒளிப் பிழம்பெனத் திகழும் அவனுடைய தேஜோமயமான பிரகாசத்தை மனிதனால் கண் திறந்தே பார்க்க முடியாது. அவனுடைய எழிலுருவத்தைக் காணக் கண்கள் கூசும்; தானாகவே மூடிக்கொண்டு விடும். அந்தப் பேருண்மையை அறிய முயலுவதும், அந்தக் கடவுளை அடைவதற்காகக் கடுந்தவம் புரிவதும் வீண். விழலுக்கு நீர் இறைத்த கதையாகத்தான் முடியும். அத்தகைய ஈசுவரனை நீங்கள் அறிய முடியும் என்றால், உங்கள் கற்பனைக் கண்களில் அகண்டாகாரமான, அனந்தமான அந்தப் பரம்பொருள் தென்படக்கூடும் என்றால், இப்பெரும் புவியைச் சிருஷ்டித்த அந்தக் கடவுள் கடவுளாக எப்படி ஆக முடியும்? ஆனால் யோகி, நீரும் நானும் பூஜிக்கிறோமே, அந்தக் கடவுளுக்கும் உண்மையான பரம்பொருளுக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் இல்லை. நீரும் நானும் பூஜிக்கும் கடவுள் இருக்கிறாரே அவர் கற்பனையில் உதித்தவர். சமூகம் தன் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு, அந்தக் கடவுளைச் சிருஷ்டித்துக் கொண்டிருக்கிறது" என்றார்.

சாணக்கியர் இதைச் சொல்லி நிறுத்தி நாற்புறமும் ஒரு முறை தம் பார்வையைச் செலுத்தினார். எங்கும் நிச்சப்தம் நிலவியிருந்தது. யோகி குமாரகிரியின் கண்கள் மூடியிருந்தன. அவன் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருப்பது போலத் தோன்றியது. சாணக்கியர் தம் ஆசனத்திலிருந்து எழுந்து மறு முறையும் சபாமண்டபத்தைப் பார்த்தார். அவருடைய அந்தப் பார்வையிலே ஒரு விதக் கர்வம் தாண்டவமாடியது;

அவருக்குத் தம்மீது அபார நம்பிக்கை இருப்பதையும் அந்தப் பார்வை எடுத்துக் காட்டியது. 'சபா மண்டபத்தில் வீற்றிருக்கும் வித்வான்களில் யார் வேண்டுமானாலும் தம்முடன் வாதத்துக்கு வரலாம்; தாம் பதில் சொல்லத் தயார்' என்பதுபோல அவர் விழிகள் தோற்றமளித்தன.

சிறிது நேரம் வரை பதிலை எதிர்பார்த்த பின்னர், சாணக்கியர் மறுபடியும், "நான் சொல்லவேண்டியதை இன்னும் சொல்லி முடித்தாகவில்லை. ஆம், நான் என்ன சொன்னேன்? நீங்களும் நானும் பூஜிக்கும் தெய்வம் கற்பனையில் உதித்தது, சமூகத்தினால் சிருஷ்டிக்கப்பட்டது என்றுதானே சொன்னேன்? வெவ்வேறு சமூகங்கள் தங்கள் தங்கள் கற்பனைக்கு உகந்தவாறு பற்பல விதங்களில் கடவுளைச் சிருஷ்டித்துக் கொண்டிருக்கின்றன. அந்தராத்மாவைப் பற்றிய ஒரு விஷயத்தையும் இங்கே தெளிவாக்கிவிட வேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன். அந்தராத்மாவைப் பற்றி இதுவரை முடிவாகியுள்ள அபிப்பிராயங்களில் பல, பெரும்பாலும் சந்தேகத்தை இன்னும் அதிகமாக்குவதாகவேதான் அமைந்திருக்கின்றன. அந்தராத்மா ஈசுவரனால் நிர்மாணிக்கப்பட்டதல்ல; சமூகத்தினால் நிர்மாணிக்கப் பட்டதுதான். உண்மையிலேயே அது ஈசுவரனால் அளிக்கப்பட்டதாக இருக்குமானால், வெவ்வேறு சமூகத்தினரின் அந்தராத்மாக்கள் அந்தந்த சமூகத்துக் கேற்றவாறு வெவ்வேறு விதமாக அமைந்திருப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லை. கடவுள் ஒருவரேதான். உண்மையில் தர்ம சாஸ்திரத்தின் கோட்பாடுகளை அவரே வரையறுத்திருந்தால், ஒவ்வொரு மனிதனும் அதே கோட்பாடுகளுக்கு அடங்கி நடக்கவேண்டியிருந்திருக்கும். ஆனால் நடைமுறையில் அப்படியிருப்பதாகத் தெரியவில்லை. ஒரு சமூகத்தைச் சார்ந்தவனின் அந்தராத்மா இன்னொரு சமூகத்தைச் சார்ந்தவனின் அந்தராத்மாவைப் போல இல்லவே இல்லை என்பது கண்கூடு. எதைச் சமூகம் அநுசிதமான காரியம் என்று எண்ணுகிறதோ, அதைத்தான் தனிப்பட்ட மனிதனின் அந்தராத்மாவும் அநுசிதம் என்று எண்ணுகிறது. ஆகவே சமூகம்தான் அந்தராத்மாவைச் சிருஷ்டித்தது என்று ஐயந்திரிபறத் திட்டமாகச் சொல்லலாம். சமூகத்தின் நியமங்கள் மீதும் கோட்பாடுகள் மீதும் மனிதனுடைய உள்ளத்திலே ஏற்படும் குருட்டு நம்பிக்கையையும் பூரண சிரத்தையையும்தான் நாம் அந்தராத்மா என்கிறோம். சமூகத்தை விலக்கித் தனியாக அந்தராத்மா என்று ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தால், அந்தராத்மா என்று ஒன்று தனித்திருப்பதாகவே தோன்றவில்லை" என்றார்.

சாணக்கியர் இதைச் சொல்லி முடித்ததும் தம் ஆசனத்தில் அமர்ந்தார். வித்வான்களில் பலர், சாணக்கியரின் அபாரமான தர்க்க சாதுரியத்தைக் கண்டு வியந்து அவரிடம் அபார பக்தி பூண்டு தலை வணங்கினர்.

சாணக்கியரின் பேச்சைக் குமாரகிரி கேட்டானோ, இல்லையா என்று சொல்வதற்கில்லை. அவன் அப்பொழுதும் 'சித்தன் போக்கு, சிவன் போக்கு' என்று தன் சிந்தனையிலேயே லயித்திருந்தான். அவனுடைய கண்கள் மூடியிருந்தன. சாந்தமே உருவெடுத்த அவனுடைய வதனத்திலே இணையற்ற தேஜஸ் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. சாணக்கியரின் தகர்க்க முடியாத தர்க்கத்துக்குப் பதில் சொல்லக் குமாரகிரியினால் ஆகாது என்றே சபையில் கூடியிருந்த ஜனங்கள் தீர்மானித்து விட்டனர். ஆகவே அப்பொழுது கிட்டிய வெற்றி மகா மந்திரி சாணக்கியருக்குத்தான். சக்கரவர்த்தி சந்திரகுப்தர் புன்னகை புரிந்தவாறு அதைக் கண்டு ரசித்துக் கொண்டிருந்தார். சிறிது நேரம் வரை யாராவது பதில் சொல்ல எழுந்திருக்கலாம் என்று எதிர்பார்த்தார். கடைசியில் ஒருவரும் எழுந்திராமற் போகவே, தன் பக்கத்திலிருந்த பிரதானிகளில் ஒருவனுக்குச் சமிக்ஞை செய்தார். அவன் உடனே எழுந்து, "தர்க்க சபை இத்துடன் முடிவுற்றது. இன்னும் சிறிது நேரத்தில் நாட்டியக் கச்சேரி ஆரம்பமாகும்" என்று தெரிவித்தான். சபையிலே நிலவியிருந்த அமைதி கலைந்தது. வந்திருந்த நிற்பாசர்கள் 'கலகல' வென்று பேசிச் சந்தோஷ ஆரவாரம் செய்ய ஆரம்பித்தனர்.





## எட்டாம் அத்தியாயம்

# எது பொய்?

அதே சமயம் சித்திரலேகா சிங்கார வீதியிலிருந்து சதங்கைகள் குலுங்க, மேல் ஆடைகள் மினுமினுக்க, தளர்நடை நடந்தவாறு சபா மண்டபத்திலுள்ளே பிரவேசித்தாள். அவள் அணிந்திருந்த ஆபரணங்கள் இனிய நாதத்தை எழுப்பி இன்னிசையின் இன்பத்தைத் தந்தன. சித்திரலேகா சபா மண்டபத்திலே பிரவேசித்தது தான் தாமதம்; சலமற்ற வறட்டு வேதாந்த விசாரத்திலே ஈடுபட்டிருந்த அந்தச் சபா மண்டபத்தின் நிலைமையே அடியோடு மாறி விட்டது. சித்திரலேகாவின் மனோமோகன எழிலுருவத்திலே தன் நிலையை மறந்து அந்தச் சபை முழுவதுமே மனதைப் பறி கொடுத்து விட்டது. விடிவெள்ளி மறைந்ததும், நடுங்கவைக்கிற பனி ஒடுங்குகின்ற உஷா தேவியின் மங்கிய ஒளியைக் கீறிக் கொண்டு காலை இளஞ் சூரியன் அருணனின் ரதத்திலே அமர்ந்து 'தகதக' வென்று ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்துக் கொண்டு ககனப் பிரவேசம் வருவது போன்றிருந்தது. ஹேமந்த ருதுவின் வறட்சியிருந்த குளிர் காற்றிலே வசந்த ருதுவின் மனோரம்மியமான மணங் கமழும் மந்தமாருதம் வந்து கலப்பது போலிருந்தது. அந்தச் சூழ் நிலையே அப்படிப் புரட்சிகரமாக மாறிவிட்டது.

அரங்க மேடையின் மத்தியில் வந்து நின்றதும் சித்திரலேகா முதன் முதலாகச் சக்கரவர்த்திக்கு . வணக்கம் செலுத்தினாள். அப்பொழுது அவளுடைய அழகிலே என்றுமே கண்டிராத ஒரு கவர்ச்சி இருந்தது. அவளுடைய முகம் பௌர்ணமி சந்திரனை யொத்திருந்தது. இலேசாக ஊசலாடிக்கொண்டிருந்த பின்னல் கரு நாகத்தை யொத்திருந்தது. அந்தக் கரு நாகம் தன்னுடைய விஷத்தின் வேகம் தாளாமல், சந்திரனிடமிருந்த அமிர்தத்தைப் பிடுங்கிக் கொள்வதற்காகச் சுற்றி வளைத்துக் கொண்டிருப்பதுபோலத் தோன்றியது. அவளுடைய தலைப் பின்னலிலே 'பளபள' வென்று பிரகாசித்துக் கொண்டிருந்த முத்துச் சரங்கள் சங்கடத்தில் சிக்குண்டிருக்கும் சந்திரனைப் போர் புரிந்து மீட்கும் பொருட்டு அணிவகுத்து நிற்பது போலக் காட்சி அளித்தன.

தங்க விக்கிரஹம் போன்றிருந்த அவளுடைய சரீரத்தைப் பட்டாலாகிய மேலாடை

ஒன்று அலங்கரித்தது. அது இருப்பதும் ஒன்றுதான், இல்லாமல் இருப்பதும் ஒன்றுதான் என்று சொல்லும் அளவுக்கு அவ்வளவு மெல்லியதாக இருந்தது அந்த மேலாடை. ஜரிகை போட்ட மெல்லிய ரவிக்கை ஒன்று அந்த மேலாடைக் குள்ளிருந்து கண்களைப் பறித்துக்கொண்டு போய்விடுவது போலப் 'பளபள' வென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. இயல்பாகவே வனப்பு மிகுந்த அவளுடைய சரீரத்தை அவள் அணிந்திருந்த ஆடை ஆபரணங்கள் பன்மடங்கு அதிகமாக எடுத்துக் காட்டின. மெல்லிய தங்கக் கம்பிகளைக் கொண்டு 'ஜிகினு' வேலை செய்யப்பட்டு — நாட்டியத்திற் கென்றே பிரத்தியேகமாகத் தயார் செய்யப்பட்டிருந்த அவளுடைய உடை, இரவு வேளையில் பட்டப் பகலைப்போலப் பிரகாசித்துக் கொண்டிருந்த அந்தக் கொலு மண்டபத்தின் வெளிச்சத்திலே 'தக தக' வென்று மின்னிக் கண்களைக் கூசம்படி செய்து கொண்டிருந்தது. ரத்னுபரண பூஷிதையாக விளங்கிய அவள் சாக்ஷாத் லக்ஷ்மி தேவியாகவே தோற்றமளித்தாள்.

சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்திய பின்னர், கொலு மண்டபத்திலே வீற்றிருந்த சிற்றரசர்களனைவரையும், சித்திரலேகா தனது சிரிக்கும் விழிகளால் ஒருமுறை நோக்கினுள். சிற்றரசர்கள் செய்த சந்தோஷ ஆரவாரம் கொலு மண்டபத்தையே கலகலக்கச் செய்தது. அவர்கள் ஒவ்வொருவரும் பிறப்பெய்தின தன் பலனைப் பெற்று விட்டதாகவும் ஜன்ம ஸாபல்யம் அடைந்து விட்டதாகவும் கருதி மகிழ்ச்சிக் கடலில் மிதந்தனர். சிற்றரசர்களை ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டே வந்த சித்திரலேகாவின் கண்கள் பீஜகுப்தனின் அருகே வந்ததும் அப்படியே நிலைத்து நின்றுவிட்டன. இந்தத் தடவை அவளுடைய கண்கள் மட்டும் சிரிக்கவில்லை; அவளுடைய வதனத்திலும் மோகனப் புன்னகை படர்ந்தது. பீஜகுப்தனும் பதிலுக்கு இலேசாகச் சிரித்தான். சித்திரலேகா புளகாங்கிதமுற்றுள். தன் வணக்கத்துக்குப் பதில் வணக்கம் கிடைத்ததிலே அவளுக்கு அலாதி மகிழ்ச்சி.

பிறகு சித்திரலேகா கற்றேர்கள் குழுமியிருந்த பக்கம் திரும்பித் தலை வணங்கினுள். அவள் அந்தப் பக்கத்திலிருந்து தன் பார்வையைத் திருப்பும்பொழுது எதேச்சையாக அவளுடைய பார்வை யோகி குமாரகிரியின் மீது விழுந்தது; சிறிது நேரத்துக்கு அவன்மீதே லயித்தும் விட்டது. 'யோகி



குமாரகிரி தன் பக்கம் திரும்பிப் பார்க்க மாட்டானா?" என்ற ஆவலில், சித்திரலேகா சிறிது நேரம் வரை குமாரகிரியையே பார்த்த வாறு நின்றாள். ஆனால் தியானத்திலே ஈடுபட்டிருந்த யோகி இந்த உலகத்துச் சிந்தனையில் ஈடுபட்டிருந்தால் அல்லவா, அவன் அவளைப் பார்ப்பதற்கு? அவன் வேறு ஏதோ ஒரு உலகத்தில் அல்லவா சஞ்சரித்துக் கொண்டிருந்தான்? நம்பிக்கை இழந்த சித்திரலேகா தன் கண்களை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

சாரங்கி வாத்தியம் மிருதங்கத்தின் கம்பீர நாதத்துடன் இழைந்து கல்யாணி ராகத்தை மீட்டத் தொடங்கியதுதான் தாமதம்; சபையிலே எழுந்த சந்தோஷ ஆரவாரம் ஒரு நொடிப்பொழுதில் 'கம்' என்று அடங்கி விட்டது. சதங்கைகள் 'கல், கல்' என்று ஒலிக்க, சித்திரலேகாவின் மென்மையான பாத கமலங்கள் தாளத்துக் கேற்றவாறு அசைந்து கொடுத்தன. அடுத்த கணம் நடனம் ஆரம்பமாகி விட்டது. சித்திரலேகா திரும்பும் இடங்களில் எல்லாம் 'பளிச், பளிச்' என்று மின்னல் போன்ற பிரகாசம் எழுந்தது. மிருதங்கத்தின் இனிய நாதம் மேகங்களின் கம்பீரமான கர்ஜனையை நினைவூட்டியது. நாற்புறமும் நிச்சப்தம் நிலவி யிருந்தது. சபையில் கூடியிருந்த ஒவ்வொருவனும் மந்திர வசப்பட்டவன் போலக் கலையின் மகோன்னதமான காட்சியைக் கண்டுகளிப்பதிலே ஈடுபட்டிருந்தான்.



வாத்தியார்:—ஏண்டா உனக்கு வெட்கமில்லை? ஒரே வகுப்பிலேயே மூன்று வருஷமாக உட்கார்ந்து கொண்டிருக்கவே......!

பையன்:—ஸார்! எனக்கு வகுப்பு பேதமே கிடையாது ஸார்......!

திடீரென்று குமாரகிரி தன் கண்களைத் திறந்தான். அவனுடைய கண்களிலே அப்பொழுது ஒரு தெய்விக ஒளி சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவன் தன் ஆசனத்திலிருந்து எழுந்து நின்று, "மந்திரி சாணக்கியரே! நான் கடவுளைக் கண்டிருக்கிறேன். உங்களுக்கும் இங்கே கூடியிருக்கும் ஏனைய மக்களுக்கும் கூட இதே இடத்தில் என்னால் கடவுளைக் காண்பிக்க முடியும்" என்று மிகவும் கம்பீரமான குரலில் சொன்னான்.

சபையிலே நிலவியிருந்த அமைதிக்குச் சிறிது பங்கம் விளைந்தது. குமாரகிரியின் சொற்கள் சிலருடைய காதில் விழுந்தன; சிலருடைய காதில் விழவில்லை. குமாரகிரி சொன்னவற்றைக் கேளாதவர்களில் பெரும்பான்மையோர் சிற்றரசர்கள்; அவர்கள் நடனம் பார்ப்பதில் தங்களை மறந்து லயித்திருந்தனர். அவர்கள் "உஷ்! அந்த யோகியை உட்காரச் சொல்லுங்கள்!" என்று இரைந்து கத்தினர்.

சித்திரலேகாவின் காதிலும் யோகி சொன்னது விழவில்லை. நடன மாடுவதில் கருத்தைச் செலுத்தியிருந்த அவளுக்கு அதைக் கேட்கப் பொழுது எங்கிருந்தது? அவளுடைய பாதங்களில்தான் என்ன மந்திர சக்தி இருந்ததோ, தெரியவில்லை. யாருமே என்றைக்குமே கண்டிராத முறையில், அவை துரித காலத்தில் நடனமாடிச் சபையோரை ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டன. சந்திரகுப்த மகாராஜா சாணக்கியரின் பக்கம் திரும்பிப் பொருள் புதைந்த ஒரு பார்வை பார்த்தார். சாணக்கியரும் சக்கரவர்த்தியை ஒரு முறை ஆவலோடு நோக்கினார். யோகி குமாரகிரி ஒரு மாபெரும் விஷயத்தைச் சொல்லி, அதை நிரூபிக்கவும்கூட அல்லவா தயாரா யிருந்தான்! ஆகவே சாணக்கியர் எழுந்து நின்று, "கல்வி கேள்விகளிற் சிறந்த கனதனவான்களே! சிற்றரசர்களே! யோகி குமாரகிரி தாம் கடவுளை நேரில் கண்டிருப்பதாகக் கூறுகிறார். அதுமட்டும் அல்ல; இதே இடத்தில் இங்கே வீற்றிருக்கும் அனைவருக்கும் தம்மால் கடவுளைக் காண்பிக்க முடியும் என்றும் சொல்லுகிறார். மகாராஜாவும் அதற்குத் தம் பூரண சம்மதத்தைத் தெரிவித்திருக்கிறார். ஆகவே நடனத்தைச் சிறிது நேரத்துக்கு ஒத்தி வைப்பதுதான் உசிதம் என்று தோன்றுகிறது" என்றார்.

இதைச் சிற்றரசர்களும் கேட்டார்கள்; சித்திரலேகாவும் கேட்டாள். அவள் உடனே

கடனத்தை நடுவே கிறத்திவிட்டு, கோபக் கனல் வீசும் கண்களால் சாணக்கியரை ஒரு முறை பார்த்தான். பிறகு அதை விட இரண்டு மடங்கு கோபத்துடன் யோகி குமாரகிரியைச் சுட்டெரித்து விடுபவன் போலப் பார்த்தான். அதன்பின்னர் அவன் வாய் பேசாமல் ஒரு மூலையில் போய் ஆசனம் ஒன்றில் அமர்ந்தான். சாணக்கியர் மறுபடியும் எழுந்து, "யோகி குமாரகிரி! நாங்கள் கடவுளைக் காணச் சித்தமாயிருக்கிறோம்." என்றார்.

குமாரகிரி தன் ஆசனத்திலிருந்து எழுந்தான். "சபையில் வீற்றிருக்கும் அறிவாளிகளே! சித்தாசர்களே! என்னைக் கவனியுங்கள்!" என்றான்.

யோகி குமாரகிரி நின்று கொண்டிருந்த இடத்துக்கருகே, யக்ஞ வேதியிலிருந்து அக்கினி ஜ்வாலை ஒன்று எழுவதையும் அது சிறிது சிறிதாக வளர்ந்து கொலு மண்டபத்தின் கூரையை நோக்கிச் செல்வதையும் கூடியிருந்த மக்கள் அனைவரும் கண்டனர். அந்த அக்கினி ஜ்வாலையின் பிரகாசம் கோடை காலத்து மத்தியான சூரியனின் பிரகாசத்தைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாயிருந்தது. சிறிது நேரத்துக் கெல்லாம் அது கூரையைப் பிளந்துகொண்டு மேலோங்கத் தொடங்கியது; கடைசியில் வானளாவ உயர்ந்தும் விட்டது. முதலில் கம்பிபோல மிக மெல்லியதாகக் காட்சியளித்த அந்த அக்கினி ஜ்வாலை வர வர உருவத்திலும் பெரிதாக ஆரம்பித்தது. அதன் தேஜோமயமான ஒளி வரவரக் கண்களைக் கூசச் செய்யவே, மக்களின் கண்கள் தாமாகவே மூடிக் கொள்ளத் தொடங்கி விட்டன. ஆனால் அதில் ஆச்சரியம் என்னவென்றால், அந்த அக்கினிப் பிழம்பிலே கொஞ்சம்கூட வெப்பத்தைக் காணோம்; பிரகாசம் மட்டுமேதான் இருந்தது. "இதுதான் சத்தியம்" என்றான் குமாரகிரி.

"நீங்கள் சொல்லுவது முழுவதும் பொய். அங்கே ஒன்றையும் காணோமே!" என்று உரக்கக் கூவினார் சாணக்கியர்.

இந்தத் தடவை ஜனங்கள் வியப்பு மிகுதியினால் சாணக்கியரைப் பார்த்தனர். "வயது முதிர்ந்தவரான மந்திரி சாணக்கியரின் கண்களில் சத்தியத்தின் ஒளி தென்படவில்லை போலும்!" என்றான் குமாரகிரி.

"என்ன? ஒளியா! எங்கே? அங்கே ஒன்றையுமே காணோமே!" என்று படபடப்புடன் கேட்டார் சாணக்கியர்.



"என்ன வண்டிக்காரா? மாம்பலம் போக வண்டிக்கு எவ்வளவு சத்தம் கொடுக்க வேண்டும்?"

"உங்களுக்கும் அம்மாளுக்கும் சேர்த்து ஒரு ரூபாய் கொடுத்துடுங்க. உங்க இரண்டு பையன்களுக்கும் ஒன்றும் தரவேண்டாம்."

"ரொம்ப சரி! நாங்கள் இரண்டு பேரும் நடந்து வருகிறோம். இந்தப் பையன்களை மாத்திரம் ஏற்றிக் கொண்டு போ!"

---

குமாரகிரி சாணக்கியருக்கு யாதொருவிதமான பதிலும் அளிக்கவில்லை. அவன் மறுபடியும் கொலுமண்டபத்திலிருந்த மகாஜனங்களை நோக்கி, "இதோ பாருங்கள்!" என்று இரைந்தான்.

இந்தத் தடவை அக்கினி ஜ்வாலையின் ஒளி மங்கியது. வர வரக் குறைந்து அந்த அக்கினி ஜ்வாலை தணலாக மாறியது. அந்தத் தணலில் மக்கள் அநேக பிராணிகளைப் பார்த்தனர். அவை ஒரு மூலையில் உற்பத்தியாகி இன்னொரு மூலையில் மறைந்தன. அந்தத் தணலிலே விசாலமான நகரங்கள் நிர்மாணமாவதையும், பின்னர் அழிவதையும் மக்கள் கண்டனர். பூமி, நீர், காற்று, ஆகாயம் என்ற மற்ற நான்கு பூதங்களும் கூட அதில் தெரிந்தன. பிறகு சிறிது சிறிதாக அந்தக் காட்சிகளெல்லாம் மறைந்தன. தணல் மட்டுமே எஞ்சியிருந்தது.

"இதுதான் கடவுள்!" என்றான் யோகி குமாரகிரி.

சாணக்கியர் இந்தத் தடவை பித்தனைப் போல உரத்த குரலில் "என் கண்களுக்கு ஒன்றுமே தெரியக் காணோமே! யோகி! நீங்கள் பொய் சொல்லுவதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது" என்றார். (தொடரும்)




### கெட்டிக்காரர்!

**டாக்டர்:**—நீங்கள் இனிமேல் வீட்டிலே சாப்பிடுங்கள்; ஹோட்டலிலே சாப்பிடாதீர்கள். உங்கள் உடம்புக்கு ஆகாது.

**நோயாளி:**—வீட்டில்தானே சாப்பிடுகிறேன்? ஹோட்டலில் நான் சாப்பிடுவதே இல்லையே!

**டாக்டர்:**—ஓகோ! அப்படியானால் வீட்டில் சாப்பிடாதீர்கள்; ஹோட்டலிலே சாப்பிடுங்கள்!

★

### நல்ல யோசனை!

**ஒருவர்:**—டாக்டர் ஸார்! நான் ஆற்றிலே விழுந்து திணறுவது போல அடிக்கடி சொப்பனம் காண்கிறேன்; என்ன செய்யலாம் அதற்கு?

**டாக்டர்:**—என்ன செய்கிறது? நீந்தக் கற்றுக் கொண்டு விடுங்கள்!

★

### அடடா!

"என்னு, இங்கே டம்ளரிலே விளக்கெண்ணெய் வைத்திருந்தேனே, குழந்தைக்கு! நீங்கள் பார்த்தீர்களா?"

"ஐயையோ! அது விளக்கெண்ணெயா? நீ காப்பிதான் வைத்திருக்கிறாயாக்கும் என்று நினைத்து நான் அதைக் குடித்து விட்டேனே!"

★

### அப்படியா?

**நண்பர்:**—நீங்கள் ஒரு புத்தகம் எழுதுவதாகக் கேள்விப்பட்டேன். "மனதைத் திடம் செய்து கொள்ளுவது எப்படி?" என்று பெயர் வைத்திருப்பதாகவும் சொன்னார்கள். அந்தப் புத்தகத்தை எழுதி முடித்து விட்டீர்களா?

**ஆசிரியர்:**—எழுதி முடித்து விட்டேன். ஆனால், அதை வெளியிடுவதற்குத்தான் மனசு இடப்பட மாட்டேன் என்கிறது!

### வெகுமதியா?

"என் மைத்துனன் ஊரிலிருந்து வந்து மூன்று மாதம் ஆகிறது. இன்னும் ஊருக்குப் போகிற வழியாயில்லை. இந்த லக்ஷணத்தில் அவனுக்கு ஏதாவது 'ப்ரெஸெண்ட்' கொடுக்க வேண்டும் என்று என் சம்சாரம் உபத்திரவம் செய்கிறாள்!"

"திரும்பி ஊருக்குப் போக ரயில்வே டிக்கெட் வாங்கிப் 'ப்ரெஸெண்ட்' செய்து விடுங்களேன்!"

★

### தர்மசங்கடம்

"ஸார், ஒரு மாசமாக இராத்திரியிலே தூக்கம் வர மாட்டேன் என்கிறது. ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது!"

"என் ஸார், இந்த ஊரிலேதான் மூன்று டாக்டர்கள் இருக்கிறார்களே! அவர்களிடம் போய் ஏதாவது வைத்தியம் செய்து கொள்ளுகிறதுதானே?"

"அந்த மூன்று டாக்டர்களுக்கும் நான் கொடுக்க வேண்டிய பணத்தை நினைத்துத்தானே தூக்கம் வாராமல் தவிக்கிறேன்!"

★

### உண்மை!

**வந்தவர்:**—நீங்கள் சாஹித்தியங்கள் செய்கிற தொழிலை விட்டு விட்டீர்களா? சங்கீத வித்வானாகக் கிளம்பப் போகிறேன் என்று சொன்னதாலே கேட்கிறேன். வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாதீர்கள்....

**சாஹித்ய கர்த்தா:**—அதுபாட்டுக்கு அது இருக்கும், ஸார்! என் சாஹித்தியங்களைத்தான் யாரும் பாடமாட்டேன் என்கிறார்களே!

★

### சரிதான்!

**கரி வாங்கினவர்:**—என்னங்க, கரி நன்றாக எரியுமா, எரியாதா?

**கரிக் கடைக்காரர்:**—எல்லாம் நீங்கள் விசிறுவதைப் பொறுத்து இருக்குங்க!

# படித்துப் பார்!

## சக்தி

மனிதன் வான வீதியில் இன்று தொலை தூரம் பறக்கிறான்; எத்தனையோ ஆயிரம் டன் எடையுள்ள சாமான்களைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு ஆழ்கடலில் ஆயிரக் கணக்கான மைல்கள் அநாயாசமாகச் செல்கிறான்; மாமலையின் உச்சியிலிருந்து விழும் நீர்வீழ்ச்சியின் சக்தியைப் பயன்படுத்தி அதிலிருந்து மின்சார சக்தியைப் பெறுகிறான்; அகில உலகத்தையும் அழிக்கவல்ல அணு சக்தியைக் கண்டு பிடித்து அதை வேண்டும் பொழுது உபயோகிக்கும்படியும் கட்டுப்படுத்தி யிருக்கிறான்.

நீர்ச் சக்தி, எண்ணெய்ச் சக்தி, மின்சார சக்தி, அணு சக்தி, ஒளிச் சக்தி, ஒலிச் சக்தி என்று இந்தச் சக்தியின் திறன் அபாரமாக விரிந்து கிடக்கிறது. இந்தச் சக்திகளை ஒன்று சேர்த்து நாம் விஞ்ஞானம் என்று கூறுகிறோம். இந் நூலில் விஞ்ஞானம் சாதிக்கும் விசித்திரங்களையெல்லாம் விரிவாகக் கூறியிருக்கிறது.

இன்று நடப்பது இயந்திர சகாப்தம். உடல் வலுவைக் கொண்டே இயற்கைச் சக்தியைப் போராடுவதற்குப் பதிலாக இயற்கைச் சக்திகளைக் கொண்டே மற்ற இயற்கைச் சக்திகளை எதிர்க்கும் காலம் இது. ஆனால் நாம் பூரணமாக மேற்கூறிய சக்திகளை இன்னும் பயன்படுத்திக் கொள்ளவில்லை; அவ்வாறு பயன்படுத்திக் கொண்டால் இன்னும் எத்தனையோ அற்புதங்களைச் சாதிக்கலாம் என்று ஆசிரியர் இந் நூலில் விளக்குகிறார். மிகவும் உபயோகமான இந் நூலின் விலை ரூ. 1–8–0; விலாசம்: புரொபஸர் ஆர். கே. விசுவநாதன் எம். ஏ., அண்ணாமலை நகர், சிதம்பரம்.

## 1. Indigestion
## 2. Constipation, Dyspepsia and Consumption.

தமிழ் வேதம் என்று கருதப்படும் திருக்குறளில், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம்முடைய தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் மருந்தைப் பற்றியும் நோயைப் பற்றியும் கூற வந்தபோது,

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு
அருந்தியது அற்றது போற்றியுணின்"

என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லியிருக்கிறார். அல்லோபதி, ஹோமியோபதி முதலிய அநேக வைத்திய முறைகளையெல்லாம் அனுஷ்டித்து அலுத்துப் போன உலகம், கடைசியில் திருவள்ளுவருடைய முடிவுக்கே வந்திருக்கிறது. மனிதனுடைய பழக்க வழக்கங்களினாலேயே வியாதி ஏற்படுகிறது என்றும், வியாதியைப் போக்க வேண்டுமானால் உணவு முதலிய நம்முடைய பழக்க வழக்கங்களைத் திருத்தவேண்டும் என்றும், வெறும் மருந்துகளால் வியாதிகளைப் போக்க முடியாதென்றும் பல ஐரோப்பிய டாக்டர்கள் இப்போது முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இந்த வைத்தியத்தை அவர்கள் 'இயற்கை வைத்தியம்' என்று அழைக்கிறார்கள்.

தற்கால நாகரிக உலகத்தில் மக்களைப் பெரிதும் துன்புறுத்தும் பல வியாதிகளில் அஜீர்ணம், மலச்சிக்கல், க்ஷயரோகம் முதலியவை முக்கியமானவையாகும். இவற்றை இயற்கை வைத்தியத்தின் மூலம் எப்படிப் போக்கலாம் என்பதை ஸ்ரீமான் எல். ராமச்சந்திர சர்மாவும் ஸ்ரீமான் கே. லக்ஷ்மண சர்மாவும் மேற்கண்ட இரு புத்தகங்களில் அழகாகவும் தெளிவாகவும் பாராட்டத்தக்க விதமாகவும் எழுதியிருக்கிறார்கள். முதல் புத்தகத்தின் விலை ரூ. 1–8–0; இரண்டாவது புத்தகத்தின் விலை ரூ. 2–0–0. பிரசுரம்: The Nature - Cure Publishing House Ltd., Ganeshnagar, Pudukkottai S. I. R.

## பக்தியோகம்

குருக்ஷேத்திரத்தில் அர்ஜுனன் மூலம் கண்ணன் உலகத்துக்கு உபதேசித்த மார்க்கங்கள் மூவகைப்படும். அவையாவன: கர்ம யோகம், பக்தியோகம், ஞானயோகம், என்பவையாகும். இவற்றில் பக்தியின் தத்துவங்களை ஆராய்ந்து அவற்றைத் தெளிவாக எடுத்துக் கூறுகிறது இந் நூல்.

இதை முதல் முதலாக வங்காளியில் எழுதியவர் புகழ் பெற்ற அறிஞராகிய அசுவினீ குமார தத்தர். இதைத் தமிழில் மொழி பெயர்த்தவரும் சாமான்யமானவர் அல்ல. தேச பக்தி ததும்பும் "ஆனந்த மடம்" என்னும் அற்புதமான வங்க நாவலைத் தமிழுலகத்துக்கு முதல் முதலாகக்

கொடுத்த ஸ்ரீ மகேச குமார சர்மா அவர்கள் தான் இதையும் மொழி பெயர்த்திருக்கிறார். பிரபல வங்க ஆசிரியர் எழுதிய இந் நூலை, பிரபல தமிழ் ஆசிரியர் மொழிபெயர்த்து, பிரபல பிரசுரகர்த்தர்களாகிய சக்தி காரியாலயத்தார் வெளியிட்டிருக்கும்போது இதன் சிறப்பைப்பற்றிச் சொல்லவா வேண்டும்? விலை ரூ. 5. விலாசம்: சக்தி காரியாலயம், ராயப்பேட்டை, சென்னை.

## பாரம்பரியம்

ஈசனின் படைப்பில் எத்தனையோ பிரமிக்கத் தக்க ரகசியங்கள் புதைந்து கிடக்கின்றன. இயற்கை மறைத்து வைத்திருக்கும் ரகசியங்களை யெல்லாம் மேல் நாட்டு விஞ்ஞானிகள் ஆராய்ந்து அவற்றை உலகத்துக்கு அறிவித்து வருகிறார்கள். அவற்றில் பாரம்பரியத்தைப் பற்றியதும் ஒன்றாகும்.

மக்கள் பிதிரார்ஜிதமாகச் சொத்துக்களைப் பெறலாம், அல்லது பெறாமலும் இருக்கலாம். ஆனால் பிதிரார்ஜிதமாகத் தங்கள் பெற்றோர்களிடமிருந்தோ அல்லது அதற்கும் முற்பட்ட பாரம்பரியமாகவோ உடல்அமைப்பு, மன இயல்பு, செயல் திறமை முதலான அநேக தன்மைகளைப் பெற்றுத் தான் தீர வேண்டும். இது பாரம்பரிய நியதி — என்று விளக்குகிறார் இந்த நூலுக்கு முகவுரை எழுதியுள்ள டாக்டர் ஸ்ரீ டி. எஸ். திரிமூர்த்தி அவர்கள். இந்த நியதித் தத்துவத்தை விஞ்ஞான ரீதியில் அன்பர் பெ. தூரன் அவர்கள் வெகு தெளிவாகப் படங்களுடன் விளக்கியிருக்கிறார். விலை ரூ. 1—4—0. பிரசுரம்: ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாலயம், கோயமுத்தூர்.

---

# திருவாசக வெளியீடு



சென்ற சில வருஷங்களாகப் பழந் தமிழ் பக்தர்கள் ரொம்ப ரொம்பக் குறைப் பட்டுக் கொண்டார்கள். "மாணிக்க வாசக சுவாமிகள் அருளிய திருவாசகத்தை அழகான பதிப்பாகப்போட ஆள் இல்லையா?" என்று குறைப்பட்டுக் கொண்டார்கள்.

"இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டு யுனிவர்ஸிடியில் திருவாசகத்தை எவ்வளவு சிரத்தையுடன் அழகாகப் போட்டிருக்கிறார்கள்! வெள்ளைக்காரருக்கு அல்லவா மாணிக்கவாசக சுவாமிகளின் அரும்பெரும் மகத்துவம் தெரிந்திருக்கிறது! தமிழராகிய நமக்குப் புஸ்தகத்தைக்கூட அழகாகப் போட்டு அனுபவிக்கத் தெரியவில்லையே!" என்று குறைப்பட்டார்கள்.

சென்ற மாதம் முதல் தேதி அன்று அந்தக் குறை நீங்கியது. தருமபுரம் ஆதீனம் மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இந்தக் குறையை நீக்கித் தமிழர்கள் கௌரவத்தை உயர்த்தினார்கள்.

முதல் தேதி அன்று திருவாசக வெளியீட்டை ரசிகமணி டி. கே. சி. அவர்கள் தலைமையில் வெளியிட்டார்கள்.

ரசிகமணிக்கு மகா சந்நிதானம் அவர்கள் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தபோது எடுத்த படத்தை மேலே வெளியிட்டிருக்கிறோம்.



# அவள் தெய்வம்

எஸ். வி. எஸ்.

சென்ற வருஷம் மே மாதம் கடும் வெயிலாக இருந்தது. பொழுது விடியும் போதே புழுக்கம் தாங்க முடியாது.

அன்று சந்தானத்துக்கு உள்ளத்தில்கூட ஏகப் புழுக்கமும் குமுறல்களும் ஏற்பட்டிருந்தன. சாந்தஸ்வரூபியான சந்தானத்துக்கு இவ்வளவு கோபமும் குமுறல்களும் ஏற்பட்டதற்குக் காரணம் அவனுடைய மன்னிதான்.

சந்தானம் ஏழு வயதுச் சிறுவனாக இருந்த போதே மன்னி வீட்டுக்கு வந்துவிட்டாள். அவனுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவது, சாப்பாடு போடுவது, தலைவாரிப் பின்னுவது, பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவது எல்லாமே மன்னிதான் செய்து வந்தாள். பச்சிளங் குழந்தையாக இருந்த போதே தாயை இழந்த சந்தானம் தன் மன்னியினிடத்தில் தாயின் அன்பைப் பெற்றான். தன் அண்ணாவிடமிருந்து பெறவேண்டிய சலுகைகளைக் கூடத் தன் மன்னியின் மூலமாகத்தான் பெற்று வந்தான். அண்ணாவின் முன் நின்று அவன் பேசியது கிடையாது. ஆம், மன்னியே தாயும் தந்தையுமாக இருக்கும்போது இதற்குத்தான் அவசியம் என்ன?

இப்படிப்பட்ட மன்னியின்மேல் அன்று சந்தானம் மிகவும் கோபங் கொண்டான் என்றால் அதற்கு ஏதாகிலும் ஒரு காரணம் இருக்கத்தான் வேண்டுமல்லவா?

நம் மனசு புண்படும்படி ஒருவர் பேசினால் நாம் அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டோம். நமக்கு உயிருக்கு உயிராய் விளங்கும் ஒருவரை யாராவது புண்படுத்திவிட்டால் தான் நமக்கு வேதனை யெல்லாம்!

சந்தானம் தன் உயிரையேவைத்திருந்தான் என்று சொல்லவேண்டும் அவனுடைய மனைவி லக்ஷ்மியின்மேல். அப்படிப்பட்ட லக்ஷ்மியின் மனசைப் புண்படுத்தி விட்டால் சந்தானத்தினால் பொறுக்க முடியுமா?

இரண்டு நாட்களுக்கு முன்பு லக்ஷ்மியின் மனசைக் குதூகலம் அடையச் செய்ய வேண்டுமென்று சந்தானம் அவளை ஒரு சினிமாவுக்கு அழைத்துச் சென்றான்.

இதைப் பற்றி "கண்ணைச் சிமிட்டி, கண்ணைச் சுழற்றி என்னவெல்லாமோ ஜாலக்கெல்லாம் செய்து அவனைத் தன் கைக்குள்ளே போட்டுக் கொண்டு விட்டாளே! இப்போ என்னடா என்றால் அவள் கிழித்த கோட்டை இவன் தாண்டுவதில்லை. பொழுது விடிஞ்சா பொழுது போனா எக்ஸிபிஷன் எங்கே, சினிமா எங்கே என்று அலையறதுகள். அப்பப்பா! இந்தக் காலத்துப் பெண்களே அசாத்தியம்!" என்று அடுத்த வீட்டு அம்மாமியோடு உரத்த குரலில் மன்னி தூஷித்தாள். லக்ஷ்மியினால் பொறுக்க முடியுமா? லக்ஷ்மியினால் பொறுக்க முடியவில்லை என்றால் சந்தானத்தினால்

எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? இப்படி ஒரு நாளா? இரண்டு நாளா? எத்தனை நாள் பொறுத்துப் பார்க்கிறது?

ஆகவே, சந்தானம் ஒரு விஷயம் மன்னியிடம் சொல்லி விடுவது என்று நிர்மாணித்து விட்டான்.

"ஆமாம், மன்னி! என்னை வேண்டுமானால் சொல்லு; ஆனால் அவளை மட்டும் குத்தலாகவும் எடுப்பாகவும் பேசாதே! யார் வீட்டுப் பெண்ணையோ, அழைத்து வந்து வைத்துக்கொண்டு அவள் மனசு புண்படும்படி அவளைப் பேசுவது நியாயமல்ல" என்று சொல்லிவிடத் நிர்மாணித்தான். வார்த்தை தொண்டைவரை வந்ததே தவிர அதற்குமேல் எழும்பவில்லை. எப்படியாகிலும் சொல்லிவிட வேண்டுமென்று வீட்டு வராந்தாவில் மேலும் கீழும் நடந்தானே தவிர சொல்ல முடியவில்லை! நாழிகையோ அவனை அறியாமலே ஆகிக்கொண்டிருந்தது.

"ஏது? இன்னிக்கு ஆபீஸ் கிடையாதோ? ஆம்படையாளைப் பார்த்துக் கொண்டே யிருந்தால் போதும் என்று தோன்றி விட்டதோ!" என்றாள் மன்னி. இவ்வார்த்தைகள் எரிகிற அடுப்பில் எண்ணெயை ஊற்றுவதுபோலிருந்தது சந்தானத்துக்கு!

இதற்கும் அவனால் பதில் சொல்ல முடியவில்லை. கோபந்தான் அதிகரித்தது. குளித்துச் சாப்பிட்டு விட்டு 'விர்' என்று ஆபீஸுக்கு விரைந்தான்.

கோபத்தில் கண்கூடத் தெரியவில்லை. வெளியே சென்ற சந்தானம் நேரே ஒரு காரின்மேல் மோதிக் கொண்டான். நல்லவேளையாக உயிருக்கு ஆபத்து இன்றி உடம்பில் இரண்டொரு காயங்களுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

சந்தானத்தின் இந்தக் கோலத்தைக் கண்டு மன்னி பதறிப் போனாள். கட்டில் மேல் படுக்கையை விரித்தாள். மெள்ளப் பிடித்துப் படுக்க வைத்தாள். டாக்டருக்குச் சொல்லியனுப்பினாள். வெந்நீர் போட்டுத் தானே வெந்நீர் ஒத்தடம் கொடுத்தாள்.

மன்னியின் மேல் இருந்த கோபத்தில், "நீ ஏன் சிரமப்படுகிறாய், மன்னி? அவளை ஒத்தடம் போடச் சொல்வேன்!" என்றான் சந்தானம்.

அவன் என்ன மனோபாவத்தில் சொல்லுகிறான் என்று அறியாத மன்னி "அவளுக்கு என்ன தெரியும், சிறிசு!" என்று தானே ஒத்தடம் போடலானாள். சந்தானம் ஒத்தடம் பெற்றதில் உடல் வலி குறைந்து நித்திராதேவி வசமடைந்தான்.

* * *

"சந்தானம்! இந்தப் பெண்ணைப் பற்றி என்ன சொல்லுகிறாய்?"

"மன்னி! நான் என்னத்தைச் சொல்ல..."

"கட்டிக்கப் போகிறவன் நீ சொல்லாமல் வேறு யார் சொல்ல?"

"இல்லே மன்னி, அண்ணாதான்..."

"அண்ணா என்ன சொன்னார்?"

"வரதக்ஷிணை விஷயந்தான். அவா ஆயிரத்தி ஐந்நூறன்னா, அண்ணா இரண்டாயிரத்தைந்நூறுக்குக் குறைய முடியாது என்கிறாரே" என்று இழுத்தான்.

"அப்படின்னா உனக்குப் பெண்ணைப் பிடிச்சிருக்கு. அண்ணாதான் லௌகிக விஷயங்களினால் உன் மனோரதத்துக்குக் குறுக்கே நிற்கிறார் என்கிறாயோ?"

"அப்படிச் சொல்லலாமா, மன்னி?"

"அப்படிச் சொல்லக் கூடாதுதான், கொஞ்சம் சுற்றி வளைத்துத்தான் சொல்ல வேண்டும் நீ கெட்டிக்காரன்தான் போ!" என்றாள் சிரித்துக்கொண்டே.

---



ஸர்வர்:—ஸார்! காப்பி கொண்டு வரட்டுமா?

சாப்பிட வந்தவர்:—காப்பி வேண்டாமப்பா! சர்க்கரை கிடைக்காத நாளிலே ஏதுக்குக் கஷ்டம்?

ஸர்வர்:—வேறே என்ன கொண்டு வரட்டும்?

சாப்பிட வந்தவர்:—ஒரு பாதம் அல்வா, ஒரு மைசூர்ப் பாகு, ஒரு கிரஷ் கொண்டு வாரும். அவ்வளவு தான்!

சந்தானத்துக்கு எத்தனையோ பேர் பெண் கொடுக்க முன் வந்தார்கள். ஆனால் ஒரு பெண்ணாவது சந்தானத்துக்குப் பிடித்திருக்கவில்லை. கடைசியில் ஒரு ஸப் ரிஜிஸ்தாரார் தம் பெண்ணைச் சந்தானத்துக்குக் கொடுக்க முன் வந்தார். சந்தானம் பெண் பார்த்துப் பார்த்து அலுத்துப் போய் ஸப் ரிஜிஸ்திராரின் பெண்ணைப் பார்க்க மறுத்து விட்டான். சந்தானத்தின் அண்ணா ரொம்பவும் வற்புறுத்தவே, போய்ப் பார்த்தான். பெண் பார்த்ததில் சந்தானத்துக்குப் பிடித்து விட்டது. பெயர் என்ன என்று விசாரித்துத் தெரிந்து கொண்டான். லக்ஷ்மி என்றதும் அவள் அழகுக்கு ஏற்ற பெயர்தான். லக்ஷ்மியைத் தான் மனைவியாகப் பெற்றால் தன் வாழ்க்கை உண்மையிலேயே லக்ஷ்மீகரமாக விளங்கும் என்று எண்ணினான். ஆனால் இந்த அண்ணாதான் பண விஷயமாகக் குறுக்கே நிற்கிறாரே! என்ன செய்யலாம் என்றெல்லாம் துடித்துக் கொண்டிருந்தான்.

அப்போதுதான் மன்னி சந்தானத்தின் வாயைக் கிண்டினாள். அதுதான் மேலே கண்ட சம்பாஷணை.

மன்னி சந்தானத்தின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டவுடன் நேரே அவன் அண்ணாவிடம் சென்றாள்.

"என்னா! சொற்ப பணவிஷயத்துக்காக கல்யாண காரியத்தை தடைப்போடலாமோ? சுபஸ்ய சீக்கிரம் என்று பண்ணுங்கோ" என்றாள் மன்னி.

"என் இடிரென்று அவ்வளவு அவசரம்?"

"வேளை கூடி வருகிறது!"

"எப்படி? சந்தானத்துக்குப் பெண் பிடித்திருக்கிறதாமா?"

"அது அவனை அல்லவா கேட்க வேண்டும்?" என்றாள் மன்னி.

உடனே அண்ணா சந்தானத்தைக் கூப்பிட்டார். சந்தானமும் "என்ன அண்ணா!" என்று கேட்டுக் கொண்டே வந்தான்.

"இந்த இடத்தை முடித்து விடலாம் என்று நினைக்கிறேன். அதற்கு நீ என்ன சொல்லுகிறாய்!"

"நான் என்ன சொல்லுவது?"

"இல்லை...உனக்குப் பெண் பிடித்திருக்கிறதா?" என்று நேர் கேள்வியைக் கேட்டு விட்டார்.

சந்தானம் திணறிப் போய் விட்டான்.

"அண்ணா, மன்னிக்குப் பிடித்திருக்கிறதாம்..." என்று இழுத்தான்.

"மன்னிக்குப் பிடித்தால் போதுமா? நீயல்லவா கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறவன்? உனக்குப் பிடிச்சிருக்கா என்று சொல்லு" என்றார்.

"போருமே நீங்க கேட்கிற லக்ஷணம்! புருஷக் குழந்தை இதைவிட என்ன சொல்லும். மன்னிக்குப் பிடிச்சிருக்கு என்றால் தனக்கும் பிடிச்சிருக்கு என்றுதான் அர்த்தம். இதுகூடத் தெரியவில்லையே" என்றாள் மன்னி.

அப்போது மன்னியின்பால் ஏற்பட்ட நன்றி யுணர்ச்சியினால் அவன் கண்களில் நீர் மல்கியது. ஒரு தரம் கண்களை இறுக மூடினான். மல்கிய நீர் இரு துளிகளாகக் கண்களின் கடைகளில் வந்து நின்றன. ஒரு கணம்; அடுத்த கணம் தரையில் விழுந்து சிதறிவிட்டன.

•  •  •

சந்தானத்தின் தூக்கம் கலைந்தது. மெள்ளக் கண்களைத் திறந்தான். தலையணை யெல்லாம் நனைந்திருந்தது. தூக்கத்தில் அவன் விம்மி விம்மி அழுதிருக்கிறான்!

அருமை மனைவி லக்ஷ்மி அருகில் படுக்கை மீது உட்கார்ந்திருந்தாள். மெல்லிய குரலில் "லக்ஷ்மி! நான் ஒன்று சொல்லப் போகிறேன், கோபித்துக் கொள்ள மாட்டாயே!" என்று கேட்டான்.

லக்ஷ்மி "நீங்கள் ஒன்று சொல்லி அதற்கு நான் கோபித்துக் கொள்வது என்பது கூட உண்டா?" என்று உணர்ச்சியுடன் கேட்டாள்.

"இல்லை; நான் சொல்லப் போவது உனக்குக் கோபமூட்டக் கூடிய விஷயம்!"

"என்ன?"

"மன்னி இருக்கிறாளே அவள் எனக்கு வெறும் மன்னி அல்ல! தெய்வம்!" என்றான் சந்தானம்.

"உங்களுக்குத் தெய்வம் என்றால் எனக்குந்தான் தெய்வம்!" என்றாள் லக்ஷ்மி.

சற்று முன்வரை தன் மன்னியைத் தூற்றி வந்த லக்ஷ்மியா இவ்வாறு சொல்லுகிறாள்? அவளுக்கு என்ன நேர்ந்து விட்டது? என்று எண்ணினான் சந்தானம். கணவன் உணர்ச்சி போகிற போக்கில் சமயம் நேரும்போதெல்லாம் வளைந்து கொடுப்பவள்தான் மனைவி என்பது அவன் முதல் தடவையாக இப்போதுதானே உணர்கிறான்? ஆகவே லக்ஷ்மியின் வார்த்தையைக் கேட்டு சந்தானம் வியப்படைந்ததில் என்ன ஆச்சரிய மிருக்கிறது!

# கார்த்திகை விளக்கு

எஸ். ஆறுமுகம்

வேலைக்குப் போட்டிருந்த மனுக்களுக்கு ஏதாவது பதில் வந்திருக்கும் என்ற ஆசையில் கடிதத்தை அவசரமாகப் பிரித்தான் ஸ்ரீதரன். ஆனால் தபால் நளினியிடமிருந்து வந்திருந்தது. தனக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கும் சந்தோஷச் செய்தியைத் தெரிவித்திருந்தாள் அவள்.

ஸ்ரீதரனின் ஒன்றுவிட்ட தமக்கையின் பெண் நளினி. சிறு வயது முதலே இருவரும் அன்னியோன்யமாகப் பழகியவர்கள். போன மாதம் தன் குழந்தைக்குப் பிறந்த நாள் பரிசாக நளினி வெள்ளிப் பாலாடை ஒன்றும், பட்டுச் சட்டை ஒன்றும் பார்சலில் அனுப்பியது ஞாபகத்திற்கு வந்தது ஸ்ரீதரனுக்கு. அதேபோலத் தானும் ஏதாவது ஒரு சன்மானம் அவளுக்கு அனுப்பி வைக்கவேண்டுமென்று அவனுக்கு ஆசை ஓடியது. ஆனால் ஒரு நிமிஷம் தன்னுடைய தற்போதைய ஸ்திதியை எண்ணிப் பார்த்தான். அவனுக்குக் கண்கள் கலங்க ஆரம்பித்தன.

கடந்த மூன்று மாச காலமாகக் குடும்பத்தை நிர்வாகம் செய்வது அவனுக்கு வெகு கஷ்டமாகப் போய்விட்டது. சொல்லப்போனால் முழுப் பொறுப்பும் அவன் மனைவி பாக்கியத்தைச் சேர்ந்ததாயிற்று. அவள் மூலம் வாழ்க்கை ஒரு மாதிரியாக நடந்தது. தற்காலிகமாகக் கிடைத்த 'ஆக்டிங்' உபாத்தியாயினி வேலை இரண்டு மாதம் அவர்களுக்கு எவ்வளவோ கை கொடுத்து உதவியது எனலாம். ஆனால் தற்சமயம் அதுவும் இல்லை.

வீட்டினுள் நுழைந்த ஸ்ரீதரனுக்கு ஒரு யோசனை தோன்றியது. தன் மனைவியிடம் ஏதாவது பணம் கைவசம் இருக்குமா என்று கேட்க எண்ணினான். கடைசியில் அந்த ஆசையும் கைநழுவியது. ஏனென்றால், அடுத்த வார ரேஷனுக்கு என்ன செய்வது என்று அவன் மனைவி கேட்ட கேள்விக்கு அவன் பதில் சொல்ல முடியவில்லை. கடைசியில் நளினிக்கு இரண்டு வரியில் ஆசிக் கடிதம் ஒன்று மாத்திரம் எழுதி அனுப்பினான்.

★

நாட்கள் சில கழிந்தன. உள்ளூர் தாலுகா ஆபீஸில் ஒருவாரத்துக்குத் தற்காலிகமாய் ஏதோ வேலை கிடைத்தது ஸ்ரீதரனுக்கு. அதில்தான் ஸ்ரீதரன்—பாக்கியம் தம்பதிகளுக்கு எத்தனை சந்தோஷம்! இந்த மட்டுமேனும் பகவான் தங்கள் சார்பில் இருக்கிறாரே என்று அவர்களுக்கு நிம்மதி உண்டாயிற்று.

அன்று திருக்கார்த்திகை. ஆபீஸ் முடிந்துவந்த ஸ்ரீதரன் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்த தீபாலங்காரத்தைக் கண்டு வியப்புற்றான். குழந்தையை ஏந்திய வண்ணம் தன்னை வரவேற்க வந்த பாக்கியத்தைக் காண அவனுக்குக் குதூகலம் மிஞ்சியது. தன் குழந்தையைப் பார்த்ததும் உடனே நளினியின் குழந்தை நினைவு உண்டாயிற்று. அதே சமயம் அக்குழந்தைக்குப் பரிசாக ஒன்றும் அனுப்ப முடியவில்லையே என்ற ஏக்கம் அவன் முகத்தில் பிரதிபலித்தது.

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள் போல "லெட்டர் ஒன்று வந்திருக்கிறது உங்களுக்கு" என்று கடிதத்தை நீட்டினாள் பாக்கியம். நளினியிடமிருந்த வந்திருந்த அந்தத் தபாலைப் படித்துப் பார்த்த ஸ்ரீதரனுக்கு ஆச்சரியமும் ஆனந்தமும் மாறிமாறி உண்டாயிற்று.

"மாமா அவர்களுக்கு: நமஸ்காரம். குழந்தைக்குத் தாங்கள் அனுப்பியிருந்த வாழ்த்துக் கடிதமும், தனித்து பார்சலில் அனுப்பிய ஜரிகைச் சட்டை, நிஜார் இரண்டும் கிடைத்தன. மிகவும் நன்றி. ஒரு சந்தோஷச் செய்தி! என் கணவர் வேலைபார்க்கும் அதே பாங்கியில் உங்களுக்கும் வேலைக்கு ஏற்பாடு செய்திருக்கிறார். நாளைக்கு விவரமாக அவர் உங்களுக்கு எழுதுவார்.

இப்படிக்கு,
நளினி."

அவசரம் அவசரமாகத் தன் மனைவியை அழைத்துக் காண்பித்தான் தபாலை. பாக்கியம் அதைப் பார்த்துவிட்டு அளவு கடந்த சந்தோஷம் அடைந்தாள்.

"பாக்கியம்! எனக்கு வேலை ஆகியிருப்பது முதல் ஆச்சரியம். ஆனால் அதைவிட ஆச்சரியப்படத்தக்க சம்பவம் ஒன்று நடந்துள்ளது. நளினியின் குழந்தைக்குப் பரிசாக என் விலாசத்தில் வேறு யாரோ சட்டை, நிஜார் எல்லாம் அனுப்பியிருக்கிறார்கள். அது யார் என்று தெரியவில்லையே!" என்றான்.

"ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றாள் பாக்கியம்.

★

மறுநாள் ஆபீஸிலிருந்து வந்ததும் ஸ்ரீதரன் பாக்கியத்தைப் பார்த்து, "பாக்

யம்! சமையல் எல்லாம் முடித்து விட்டதா?" என்று கேட்டான்.

"ஏன்?" என்று கேட்டாள் பாக்கியம்.

"எங்கள் ஆபீஸ் ஹெட் கிளார்க் புதிதாக வீடு கட்டி இன்று ஆறு மணிக்கு கிரகப்பிரவேசம் செய்கிறார். அதற்கு வரும்படியாக எல்லோரையும் அழைத்திருக்கிறார். வா போவோம், சீக்கிரம்!" என்றான்.

"ஆகட்டும்!" என்று பாக்கியம் 'டிரஸ்' பண்ணிக்கொள்ள ஆரம்பித்தாள்.

ஸ்ரீதரன் கூடத்தில் உட்கார்ந்து எதையோ படித்துக் கொண்டிருந்தான். பதினைந்து நிமிஷத்திற்குள் பாக்கியம் 'டிரஸ்' பண்ணிக்கொண்டு அவன் முன்பு வந்து நின்று, "போவோமா?" என்றாள்.

ஸ்ரீதரன் ஒருமுறை அவளை உற்றுப் பார்த்துவிட்டு, "அந்த பனாரஸ் புடவை எங்கே? அதை உடுத்திக்கொண்டு வருகிறதுதானே?" என்று கேட்டான்.

பாக்கியம் மிகவும் தயங்கினாள்.

"ஏன் யோசிக்கிறாய்?" என்று கேட்டான் ஸ்ரீதரன்.

"அது இங்கே இல்லை" என்றாள் பாக்கியம்.

"இங்கே இல்லையா? எங்கே போச்சு?" என்று கேட்டான் ஸ்ரீதரன்.

"ஆம், அடுத்த வீட்டு செட்டிடம் இருக்கிறது" என்றாள் பாக்கியம்.

ஸ்ரீதரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

பாக்கியம் விளக்கினாள்: "நீங்கள் நளினியின் குழந்தைக்கு ஒன்றும் அனுப்ப முடியவில்லையே என்று வருத்தப்படுவதை நான் தெரிந்து கொண்டேன். உடனே எனக்கு ஒரு யோசனை தோன்றியது. தீபாவளிக்கு சித்தப்பா அனுப்பின பெனாரஸ் புடவையை அடுத்த தெரு செட்டிடம் அடகு வைத்துப் பத்து ரூபாய் கைமாற்று வாங்கினேன். அதற்கு இரண்டு சட்டை வாங்கி உடனே பார்ஸலில் அனுப்பி விட்டேன்."

ஸ்ரீதரனின் முகம் வியப்பால் மலர்ந்தது.




டாக்டரின் பாட்டி:—என் பேரன் கொடுக்கும் இங்கிலீஷ் மருந்திலெல்லாம் வியாதி சொஸ்தமாகாது. நான் சொல்வதைக் கேளு. கொஞ்சம் அதிமதுரத்தையும் சுக்கையும் அடுப்பிலே இலேசாய்ச் சுட்டு எடுத்துக் கொள்! அப்புறம் சந்தனக் கல்லை நன்றாக அலம்பி வைத்துக் கொண்டு அதிலே ஒரு இழைப்பு, இதிலே ஒரு இழைப்பு இழைத்து, சொட்டுப் பசும் பாலிலே கலந்து இரண்டு வேளை கொடு. 'டக்' கென்று கேட்கிறதா, இல்லையா பாரு!

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 274. இந்த மனுஷனா லோகநாதன்!

ராமன் என்றால் வீர தத்துவத்துக்கு அதி தேவதை. அதனாலே ஆர அமர யோசித்து, யுத்தம் செய்யாமல் தீராது என்று முடிந்த பின்பே யுத்தத்தில் பிரவேசிக்க வேண்டும் என்று எண்ணினான். அந்த யோசனையின் மேல்தான் அங்கதனைத் தூதனாக அனுப்பினான் ராமன்.

அங்கதனும், ராவணன் சிம்மாசனத்தில் கொலு வீற்றிருக்கும் சமயமாகக் கொலு மண்டபத்திற்குள் போனான்.

ராமனுடைய பெரிய உருவத்தைப் பார்த்தான். சரி, சரி, யாராலும் இவன் மடியமாட்டான்தான். ஆனாலும் ராமன் அம்பு இருக்கத்தானே செய்கிறது என்று எண்ணினவனாய், நடந்து சென்று ராவணனது முன்னிலையிலேயே நின்றுவிட்டான்.

'இவ்வளவு துணிச்சலோடு நிற்கிற ஆசாமி யாரடா?' என்று ராவணனுக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. இந்தக் குட்டிப் பயலுக்கா இவ்வளவு துணிச்சல் என்று எண்ணிய போது வேடிக்கையாகவும் இருந்தது.

அப்படி வந்து நின்ற அங்கதனைப் பார்த்துப் பேசுகிறான் ராவணன்:

நின்றவன் தன்னைஅன் னான்
  நெருப்பெழ நிமிரப்பார்த் தாங்(கு)
'இன்றிவண் வந்தநீ யார்?
  எய்திய கருமம்என் னை?
கொன்றிவர் நின்னைமுன் னம்
  கூறுதி தெரிய'என் றான்;—
வன்திறல் வாலிசே யும்
  வாள்எயி(று) இலங்கநக் கான்.

[நின்றவன் தன்னை: அங்கதனை; அன்னான் நெருப்பெழப் பார்த்து ஆங்கு: ராவணன் கோபத்தோடு விழித்துப் பார்த்த மாத்திரத்திலேயே; இன்று இவண் வந்த நீ யார்: இந்த நேரம் இங்கே வந்து நிற்கிறாயே நீ, அதிசயமாய்த்தான் இருக்கிறது. நீ யார்; கொன்று இவர் நின்னைமுன்னம்: இதோ நிற்கிறார்களே அரக்கர்கள், இவர்கள் இப்போதே உன்னைத் தின்றுவிடப் போகிறார்கள்; கூறுதி தெரிய என்றான்: சொல்லிவிடு எனக்குத் தெரியும்படியாக, அல்லாதபடி கொஞ்சம் தாமதித்தாயானால் போச்சு காரியம்; அவர்களுடைய வயிற்றுக்குள் இரையாய்ப் போனபின், நீ சொல்ல வந்த காரியமும் உன்னோடு ஒழிந்து தானே போய்விடும் — இந்த விதமாகக் கோபத்தோடு கலந்த ஹாஸ்யமாகச் சொன்னான் ராவணன்.

இந்த வேடிக்கையைக் கேட்டதும்—வன் திறல் வாலிசேயும்: வாலி மகனான அங்கதனும்; வாள் எயிறு இலங்க நக்கான்: பல்லெல்லாம் தெரியும்படியாகச் சிரித்தான்.

குறிப்பு:—ராவணன் கொஞ்சம் தந்திரம், ஹாஸ்யம் எல்லாம் உள்ள வீரன் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.]

* * *

ராவணனது வேடிக்கையான வார்த்தை அங்கதனுக்குச் சிரிப்பு மூட்டியது; உண்மைதான். சிரிக்கவும் செய்தான். ஆனாலும் விஷயம் ஆத்திரத்தை மூட்டத்தானே செய்யும்; பேசுகிறான்:

'பூதநா யகன்,நீர்சூழ்ந் த
  புவிக்குநா யகன்,அப்பூ மேல்ச்
சீதைநா யகன்,வேறுள் ள
  தெய்வநா யகன்,நீசெப் பும்
வேதநா யகன்,மேல்நின் ற
  விதிக்குநா யகன்,விட் ட
தூதன்யான்: பணித்தமாற் றம்
  சொல்லிய வந்தேன்'என் றான்.

[பூத நாயகன்: பஞ்சபூதம் என்று அடிப்படையான வஸ்துக்கள் இருக்கின்றனவே, அவைகளில் எல்லாம் தங்கி நின்று அவைகளை இயக்கச் செய்கிற பரம்பொருள்தான்; நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன்: கடல் சூழ்ந்த பூமியிலுமே நிறைந்து நின்று உயிர் வர்க்கங்களை எல்லாம் காக்கின்ற இறைவன்தான்; அப் பூமேல் சீதை நாயகன்: செந்தாமரை மேல் இருக்கும் அந்த லக்ஷ்மிதேவியாகிய சீதைக்கு. அதாவது நீ ஏதோ சிறையில்




வைத்து விட்டோம் என்று எண்ணுகிறாயே, அந்தச் சீதாபிராட்டிக்குக் கணவன்; விதிக்கு நாயகன்: இதெல்லாம் போக விதி, மாற்ற முடியாத விதி என்றெல்லாம் சொல்லுகிறார்களே, அந்த விதியும் அவனுக்கு உட்பட்ட தத்துவந்தான்; நான் விட்ட தூதன் யான்: அந்தப் பரம் பொருளாகிய ராமன் விட்ட தூதன்தான் நான்; பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன் என்றான்: கட்டளையிட்ட வார்த்தையை உன்னிடம் சொல்லுவதற்காக வந்திருக்கிறேன் என்றான் அங்கதனாகிய தூதன்.]

• •
•

அங்கதனுக்கு ராமனே ஒரு தெய்வமாகத் தோன்றுகிறான். அனுமன் வந்து வர்ணித்த சீதையைப் பற்றிக் கேட்ட பிறகு அவனைத் தெய்வமாக அல்லாமல் வேறு எப்படி எண்ணக்கூடும் அங்கதன்.

அந்த பக்தி நிலையில் நின்று பேசுகிறான் அங்கதன். பக்திக்கான வார்த்தைகளைப் பக்தி உணர்ச்சியோடு பேசுகிறான். இதெல்லாம் ராவணன் காதில் அந்த விதமாகவா விழும்? விழவில்லைதான். இகழ்ச்சியோடு, "அப்படியா விஷயம்! சிவபிரானே அவன்! பேஷ் பேஷ் பலே பேஷ். மகாவிஷ்ணுவோ! நான்கு முகங்கள் படைத்த பிரம தேவனே! இப்படியெல்லாம் புகழ்வார்கள் என்று சொன்னாய்! பலே! பலே!" என்று பேசுகிறான் ராவணன்.

'அரன்கொலாம், அரிகொலாம், மற்(று)
அயன்கொலாம், என்பார்அன் றே!
குரங்கெலாம் கூட்டி,வே லைக்
குட்டத்தைச் சேதுகட் டி,
'இரங்குவான் ஆகின் இன் னம்
அறிதி'என்(று) உன்னைஏ வும்
நரன்கொலாம் உலகநாதன்!!'
என்றுகொண்(டு) அரக்கன்நக் கான்.

[அரன்கொலாம்: அடடே, சிவபிரானும் அவன்; அரிகொலாம்: திருமாலாம்; அயன் கொலாம்: பிரமனும்; என்பார் அன்றே: என்றெல்லாம் சொல்லுவார்கள், பேஷ், பேஷ்; குரங்கெலாம் கூட்டி வேலைக் குட்டத்தைச் சேதுகட்டி: குரங்குகளைச் சேர்த்தானும், ஏன் எறும்புகளைச் சேர்க்கவில்லையோ, ஏதோ ஒரு குட்டம் போன்ற சின்னக் கடலை அணை கட்டினானும், அதோடு நிற்கவில்லை காரியம்; இரங்குவான் ஆகின் இன்னம் அறிதி: அந்த ராவணன் மனம் இரங்குவான் என்று நீ கண்டால் அதைத் தெரிந்துவா; என்று உன்னை ஏவும்: என்று உன்னைத் தூதனாக அனுப்பினானே அந்தப் புத்திசாலியாகிய; நரன்கொலாம் உலக நாதன்: கேவலம் மனுஷ்ய உலகுக்கெல்லாம் இறைவன்! என்று கொண்டு அரக்கன் நக்கான்: என்று சொல்லிக்கொண்டு ராவணன் வாய் விட்டுப் பெருஞ் சிரிப்புச் சிரித்தான்.]



அங்கதன் பக்தியோடு சொன்ன வார்த்தையை நாமே மறந்து விட்டோம். அப்படிப்பட்ட வேகத்தோடு வருகிறது ஏளனம். வெகு நயமான பாவம் கொண்ட செய்யுள்: பாடிப் பாருங்கள்!

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை
# பருகுங்கள்



விளையாட்டுக் காரருக்கும் சரி, புலவர்களுக்கும்சரி, போர்ன்-வீடா அதிக வன்மையும் அதிக புஷ்டியும் அளிக்கும் அதனால் அதிகசக்தியும்பெறுகின்றனர். குழந்தைகள் அதன் சாக்லேட் வாசனையை விரும்புகின்றனர். காலையிலும் மாலையிலும் ஒரு கிளாஸ் சூடான அல்லது குளிர்ந்த பாலில் இரண்டு தேக் கரண்டி யளவு கலந்து பருகவும்.




-ஆரோக்கிய விருக்ஷம்-




CFY-I TAM

## காட்பரீஸ்
# போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

காட்பரி — ஃப்ரை (இந்தியா) லிமிடெட்
தபால் பெட்டி நெ. 1417 பம்பாய், தபால் பெட்டி 251 கல்கத்தா, தபால் பெட்டி 1725 மதறாஸ்

# வாழாத பெண்

## க. சோமசுந்தரம்




படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே மனசு வரவில்லை. கண்களை இறுக மூடிய வண்ணம் புரண்டு கொண்டிருந்தேன்.

பூம்...ம்...ம்...ம்...ம்...!

சங்கின் அந்த அழுகை பொலியை என்னால் சகிக்க முடியவில்லை. படுக்கையிலிருந்து எழுந்தேன்.

நேரே தெரு வாசலுக்கு வந்தேன். நான் வாசலில் வந்து நிற்பதற்கும் சங்கு ஊதுபவர் அங்கே வந்து நிற்பதற்கும் சரியாயிருந்தது.

"காலாவது வீட்டுக் கனகசபை முதலியார் பொண்ணு சியாமளா அம்மா ராத்திரி இரண்டரை மணிக்குக் காலமாயிட்டுதுங்க. இன்னுங் கொஞ்ச நாழிலே சவத்தை எடுக்கப் போறாங்க."

ஆஹா! எப்படி மடமடவென்று அவன் இந்தப் பாடத்தை ஒப்பித்தான்? அந்தக் குரல்தான் எத்தனை தெளிவாக, என்ன கம்பீரமாக இருந்தது! சொல்லும் துயர சம்பவத்துக் கேற்ற துக்கம்—ஏன்? அதன் சாயைகூட அவன் குரலில் காணவில்லையே! இறந்த பெண்ணின் உறவினர் யாராவது இதே செய்தியைச் சொல்லியிருந்தால்...? அது தொலையட்டும். 'சியாமளாங்கிறது யாரு?' என்ற கேள்வி என் உள்ளத்தில் எழுந்தது.

"என்ன? முகத்தைக்கூட அலம்பாம வாசல்லே வந்து எந்தக் கோட்டையைப் பிடிக்கப் போறேள்?"

குமட்டுச் சிரிப்போடு பக்கத்தில் வந்து நின்றாள் நீலா.

பூம்......ம்......ம்......ம்!

நீலா திடுக்கிட்டாள்.

"யாரு போயிட்டா?" என்று மிக ஈனமான குரலில் கேட்டாள் அவள்.

"யாரோ சியாமளாவாம்!" என்று ரொம்ப அசுவாரசியமாகப் பதிலளித்தேன்.

"யாரு?"

துள்ளி ஓடிவந்தது இந்தக் கேள்வி.

"காலாவது வீட்டுக் கனகசபை முதலியார் இருக்காரே, அவர் பொண்ணு சியாமளாவாம்......"

"என்ன...!"

"ஏய், நீயும் அவளோடு துணைக்குப் போயிடாதே!"

என் விளையாட்டுப் பேச்சு நீலாவுக்குப் பிடிக்கவில்லை. முகத்தைச் சுளித்தாள்.

"போதுமே உங்க பேச்சு. இந்த ஆம்பிளைகளுக்கே ஈவு இரக்கம் கிடையாது. வாழ்வுன்னாலும் சரி, சாவுன்னாலும் சரி; பரிகாசம் பண்ண வேண்டியதுதான்."

மௌனமாக அவள் முகத்தைப் பார்த்தபடி நின்றேன்.

நீண்ட பெருமூச் செறிந்தாள் நீலா. அவள் முகத்தில் வருத்தக் குறிகள் படரத் தொடங்கின.

"பாவம்! அ வ் வ ள வு தா ன் அவள் கொடுத்துவச்சது. இன்னும் இருபது வயசாகல்லே. இதுக்குள்ளே வாழ்ந்து, பெத்து, செத்துச் சிவலோகமும் போய்ச் சேர்ந்துட்டா பாவிமக!" என்று தனக்குத் தானே கூறிக் கொண்டாள் நீலா. அவளுடைய கண்களின் கோடியில் இரண்டொரு நீர்த் துளிகள் தேங்கி, உதய சூரிய ஒளியில் ஜொலித்தன.

அதற்கு மேலும் என்னால் பொறுத்திருக்க முடியவில்லை. எனக்குச் சியாமளா யாரென்பதே தெரியவில்லை. இவளோ அவள் கதையை எண்ணிக் கண்ணீர் வடிக்கிறாள்! ஆகவே, அந்தச் சியாமளா யாரென்று அவளை விசாரித்தேன்.

"சியாமளாவைத் தெரியாது?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் நீலா.

"தினசரி சாயந்திரம் கறுப்பா ஒரு பொண்ணு இந்த வழியாப் பிள்ளையார் கோயிலுக்குப் போகுமே......! உங்களுக்குத் தெரியாது?" என்றும் தொடர்ந்தாள்.

அவன் சொல்லி முடிக்குமுன் நான் குறுக்கிட்டேன்.

“ஓ! அந்தப் பொண்ணா? கட்டுக்கட்டா விபூதி பூசிக்கொண்டு போகுமே? இப்போ புரிஞ்சின்டேன்......பாவம்! நல்ல இளம் பிராயம். பதினெட்டு வயசுகூட இருக்காதே......” என்று என் வாய் தானாகவே இந்த அனுதாபச் சொற்களை அள்ளிச் சொரிந்தது. பட்டை பட்டையாக விபூதியும் குங்குமப் பொட்டும் ஒளிவீசக் கறுத்த களை பொருந்திய முகம் ஒன்று என் மனக் கண்முன் வந்து நின்றது. அந்தக் கண்களில் தேங்கி யிருந்த சோகம்...! பிள்ளையார் கோவிலைத் தாண்டிச் செல்லும் போதெல்லாம் எத்தனை நாள் அவள் கோயில் வாசலைக் கூட்டிக் கோல மிடுவதைக் கண்டிருக்கிறேன். கோயிலை வலம் வரும்போது, அவள் பிள்ளையாருக்குப் பூமாலை கட்டுவதைப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் மழைபோலக் கண்ணீரைச் சொரிந்த அந்தக் கண்கள்—இனிக் கண்ணீரைச் சொரியா! நேற்று ‘உண்மை’ யாய் இருந்த ஒருத்தி இன்று ‘பொய்’ யாய்ப் போய் விட்டாள்! என்ன நிலையற்ற வாழ்க்கை இது! நீண்ட சங்கிலித் தொடர்போல என்னென்னவோ எண்ணங்கள் என் சிந்தையில் வளர்ந்தன.

“அவள் செத்ததே நல்லது.”

நீலா இதை அனுதாபத்தோடுதான் சொன்னாள். ஆனால், அந்தச் சமயத்தில் அவள் அப்படிச் சொன்னது அநுசிதமாய்ப் பட்டது. அவளை எதிர்த்துக் கேட்கிறேன்.

“பின்னே என்ன? வாழ்ந்தாச் சீரோடு வாழணும். இல்லாமப் போனா, உயிரோடு வாழ்ந்து சீரழிய றதை விடச் சாகறதே நல்ல இல்லையா?” என்று நீலா சலிப் போடு சொன்னாள்.

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது? பேசாமல் ‘ஊம்’ கொட்டினேன்.

“அந்தப் பெண்ணுடைய அம்மா இருக்காளே, அவ மெத்த வாயாடி. அதோட கையும் நீளம். மண்டைக் கனம் ரொம்ப அதிகம். சியாமளா அப்பா இருக்காரே அவர் அந்தம்மா கைக்குள்ளே அடக்கம். இருந்த ஒரு வீட்டையும் கை கட்டு எல்லாத்தையும் அந்த அம்மா தன் தர்பாரிலே வித்துத் தீர்த்துட்டா...”

என்றாள் நீலா. ‘இதற்கும் சியாமளாவின் சாவுக்கும் என்ன சம்பந்தம்?’ என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டது என் மனம்.

நீலா மேலும் தொடர்ந்தாள்.

“அந்தக் கர்வத்துக்கும் வாய்ப்பட்டித் தனத்துக்கும் அவளண்டை யார் அண்டுவா? தன்னிச்சையாப் பார்த்து எவனோ ஒருத்தனைக் கொண்டு வந்து சியாமளாவின் கழுத்திலே கட்டி வைச்சா......!”

“ஏன்? அவள் புருஷன் கிழவனோ?”

“எல்லாம் குமரன்தான். குமரனாயிருந்து விட்டாப் போதுமா? இல்லே, அழகாயிருந்துட்டாத்தான் என்ன லாபம்? குணம் வேண்டாம்? அதான் இல்லே அவனண்டை” என்றாள்.

“ஏன்? அவன் ஏதாவது......?”

“ஏதாவதென்ன? கலியாணம் பண்ணின நாலாம் மாசமே எவளோ ஒருத்தியைப் பிடிச்சண்டு இவளைக் கை விட்டுவிட்டான். அப்பொழுது தாயார் வீட்டுக்கு வந்தவதான். வாழா வெட்டியாய் இருந்துட்டா, பாவம்!”

“ஊம்!”

“இந்த வயசிலேயே இப்படி ஆயிட்டமென்னு இருக்காதா? அந்த ஏக்கம் அவளை உருக்குலைச்சுட்டது. போதும் போதாததுக்கு டி. பி. வேறே நாலைஞ்சு மாசமா. கொஞ்சம் கொஞ்சமா உடம்பை வாட்டி வதக்கி, இப்போ கொண்டே போயிடுத்து.”



"வைத்தியம் கித்தியம் ஏதாவது பண்ணியிருக்கப்படாதா?"

"ஏதோ பண்ணினா!" என்று ரொம்ப அசுவாரசியமாகச் சொன்னாள் நீலா.

"அவ புருஷன் அப்பக் கூடக் கவனிக்கல்லியா?"

"புருஷனா அவன்? சியாமளாவைக் கொல்ல வந்த யமன் அல்லவா! அவன் அவளுக்குக் கட்டினது தாலியா? பாசக் கயிறன்னா?" என்று சீறி விழுந்தாள் நீலா.

அத்தனை ஜாதகனா அவன்! அவனைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் என்னுள்ளத்திலே எழுந்தது.

பூம்......ம்......ம்......ம்...ம்...ம்...!

இந்தத் தடவை சங்கு அலறுவது நிற்கவில்லை. அதனோடு கூட உடுக்கையும் சேமக்கலமும், திருச் சின்னமும் சேர்ந்து தெருவையே கிடுகிடுக்கச் செய்தன. 'நமசிவாய வாழ்க' என்று பண்டாரம் அலறியது; இத்தனை சத்தத்தையும் மீறிக் கொண்டு என் காதில் வந்து விழுந்தது.

"தூக்கிட்டாப்பலே இருக்கே!" என்று சொல்லி நீலா வாசலைப் பார்த்தாள்.

"பாவம்! கட்டின புருஷனோ அப்படி, வீட்டிலோ வேண்டா வெறுப்பு. உறவுக்காரரிடமோ நிந்தையும் கேலியும். ரெண்டு புள்ளே பெத்தாளே. அதுகளிலே ஒண்ணு வது அவ பேர் சொல்லத் தக்கப்படாது...?" என்று யாரோ இரண்டு பேர் தெருவில் பேசிக்கொண்டு போனார்கள்.

**தந்தையார் போயினார்: தாயார் போயினார்:**
**தாரமும் போவார்,**
**கொந்த வேல் கொண்டொரு கூற்றத்தார்**
**பார்க்கின்றார். கொண்டு போவார்.**
**எந்தநாள் வாழ்வதற்கே மனம் வைத்தியால்**
**ஏழை நெஞ்சே?**

பண்டாரம் தேவாரப் பதிகம் ஓதிக் கொண்டே சென்றான். சங்கும் சேமக்கலமும் உடுக்கையும் அவன் பாட்டுக்கு ஏற்றபடி தாளம் போட்டன.

என் பார்வை அந்த ஊர்வலத்துக்குக் காரணமான ரூபத்தின் மீது படிந்தது. அந்தப் பெண் பல்லக்கிலே உட்கார்ந்திருந்தாள். உடலிலே எளிமையான உடை; கழுத்திலே மலர் மாலை; நெற்றியில் முன்னைப் போலவே ஒளி வீசும் விபூதி, குங்குமப் பொட்டு. கண்ணீரை வற்றாது சொரிந்த அந்தக் கண்கள், இப்போது இரண்டு மூடிக் கொண்டு விட்டன. ஆனால், அந்தச் சோகம்; அது தந்த அமைதி—அது மறையவில்லையே! சாவின் கோரம் காணவில்லையே!

என் கவனம் ஊர்வலத்தின் மீது சென்றது. ஆறேழு பேர்களுக்கு மேல் அதில் இல்லை. கனகசபை முதலியாரை லேசாகத் தெரியும். ஆகவே, நானும் சட்டென்று ஊர்வலத்தில் போய்க் கலந்து கொண்டேன்.

பூம்......ம்......ம்...!

ஊர்வலம் போய்க்கொண்டே இருந்தது. திருவாசகக் கோவை புரிந்தபடி பண்டாரம் முன்னால் சென்று கொண்டிருந்தான். பிணப் பல்லக்குக்குப் பக்கத்தில் ஒருவன் —அவன்தான் சியாமளாவின் கணவன் போலும், மண் கலசம் ஒன்றை ஏந்திச் சென்றான். அவன் கண்கள் சிவந்து வீங்கியிருந்தன. அவற்றிலிருந்து அவன் திறந்த மார்பின் மீது கண்ணீர் சொட்டியபடி இருந்தது. பேயறைந்தவன் மாதிரி விழி பிடித்திருந்தது அவன் முகத்தில். தாங்க முடியாத வேதனை அவனை அரிப்பதை நான் உணர்ந்தேன். இடுப்பில் இரண்டு முழச் சல்லாத் துணியைக் கட்டிக் கொண்டு, கையில் பூரணகும்பம் தாங்கி, தள்ளாடி நடக்கும் அந்தக் 'ஜாதக'னைக் காண எனக்குப் பரிதாபமாக இருந்தது. 'ஆயிரம் இருந்தாலும் தொட்டுத் தாலி கட்டிய பாசம் விடுமா?' இந்தக் கருத்தையே சுற்றி வட்டமிட்டது என் சிந்தை.

"பாவம் இந்த இளம் வயசிலே இவருக்கு இந்தமாதிரி கஷ்டம் வந்திருக்க வேண்டாம், சார்" என்று பக்கத்தில் வந்தவரிடம் காதோடு சொன்னேன்.

அவ்வளவுதான்! அவர் "பாவமா? இவனுக்கா? சொன்ன நாக்கு அழுகிப் போயிடும் சார்! இப்ப என்னமோ மாய்ஞ்சு மாய்ஞ்சு அழறானேன்னு பார்க்கறீங்களா? எல்லாம் வேஷம் சார், வேஷம்!" என்று என் மேல் சீறி விழுந்தார்.

அவரைக் கேள்விக் குறியோடு நோக்கினேன்.

"பாருங்க, போன சனிக்கிழமை பெண்டாட்டியைப் பார்க்க வந்திருந்தான்."

"அப்போ இவன் பெண்டாட்டிகிட்ட வரதுண்டுன்னு சொல்லுங்க!"

அவர் ரொம்ப அசுவாரசியமாக, "வராம என்ன சார்? எவளையோ பிடிச்சுண்டா அவ என்னிக்குமே தாங்கிடுவாளா? கையிலே

கச்ச வந்திப்போனல் ஐயாவுக்குக் 'கேட் பாஸ்' கொடுத்துடுவா, அப்புறம் போக் இடம் ?" என்றார்.

இந்தக் கேள்வியோடு சற்று நேரம் அவர் பேசாமலிருந்தார்.

"அப்புறம் ?"

என் கேள்வி அவரைத் தூண்டி, மேலும் கதை சொல்லத் தூண்டிற்று.

"மாமியார் வீட்டுக்கு வருவான். இரண்டு மூணுநாள் பெண்டாட்டியோடே இருப் பான். அப்படிப் பிறந்ததுதான் அந்த ரெண்டு குழந்தைகளும். அவ துரதிர்ஷ்டம் அதுகளும் தக்கல்லே."

ஐயோ பாவம்! பிறந்த இடம் புகுந்த இடம் இரண்டிலுமே சுகத்தின் வாசனை யைக்கூட நுகராத அந்தப் பேதைப் பெண் ணுக்கு என் மனம் இரங்கியது.

அந்தப் போன சனிக்கிழமை விவகாரத் தைத் தெரிந்துகொள்ளும் ஆசை என்னைப் பிடுங்கியது. மெதுவாக ஞாபகமூட்டினேன்.

"அதுவா ?" என்று அவர் அதைச் சொல்ல ஆரம்பித்தார். அவர் சொன்ன தின் சாரம் இதுதான் :

"ஐந்தாறு மாதங்களாகவே சியாமளா படுத்த படுக்கையாகி விட்டாள். தாயார்க் காரி ஏதோ தன் பெண் கையில் விற்றுத் தின்றதுபோக மிச்சமிருந்த வரையில் வைத்தியம் பண்ணி யிருக்கிறாள். ஆனல், டாக்டர் சொல்லும் ராஜ வைத்தி யம் பண்ண அவள் எங்கே போவாள்? ஏதோ ஆனது ஆகட்டும் என்று அசிரத்தை யாக இருந்து விட்டாள். நோயாளி மனைவி யைப் பார்ப்பதற்கு என்று வரும் கணவ னும் கூட அவளுக்கு வைத்தியம் செய் யவோ நல்ல ஆகாரம் கொடுக்கவோ பணம் தந்ததில்லையாம்.

"போன சனிக்கிழமையும் வந்திருந்தான், பெண்டாட்டியைப் பார்க்க. பாவம்! நோயா ளிக்குப் பசி எடுத்துட்டாப்பலே இருக்குது. 'அம்மா பசிக்கறது'ன்னளாம். தாயார்க் காரி வேண்டாவெறுப்பாக, 'என்னடிம்மா பண்றது? ஹார்லிக்ஸ் ஆயிட்டுது; பாலும் இல்லே. வாங்கலாம்னாலும் கையிலே தம்பிடி கூட இல்லையென்னளாம். கொஞ்சம் பச்சைத் தண்ணியாவது கொடேன்னு அந்தப் பெண் தாயாரைக் கெஞ்சித்தாம். டி.பி. நோயாளி, காலைக்குச் சாகப் போறவ, பச்சைத் தண்ணி குடிப்பதைக் குத்துக் கல்லாட்டமா உட்கார்ந்துண்டு ரெண்டு கண்ணாலேயும் பார்த்துண்டிருந்தானும் சார், இந்தப் பஞ்சமாப் பாதகன்! என் சம்சாரம் இதைச் சொன்னப்ப என் ரத்தமே கொதிச்சுது சார்" என்றார் அவர்.

என் ரத்தம் உறைந்து போயிற்று. இப் படியும் ஒரு கணவன் உலகத்தில் இருப் பானு? மீண்டும் சியாமளாவின் கணவ னைக் கூர்ந்து நோக்கினேன். மற்றவர் களைப் போலவேதான் அவனும் உருவத்தில் ஒத்திருந்தான்! ஆனல், அவன் உள்ளம்...? இந்த வேறுபாட்டின் காரணத்தை ஆராய முயன்றது என் உள்ளம்.

ஹூம்...ம்...ம்...!

சங்கு, சேமக்கலம், உடுக்கை எல்லாம் பன்மடங்கு அதிகமாக அலறின. சிந்தனையி லிருந்து விடுபட்டுச் சற்று முற்றும் நோக் கினேன்.

பிண ஊர்வலம் சுடுகாட்டுக்குள் நுழைந் தது. போகும் வழியெல்லாம்—என்! கண் ணுக்கு எட்டிய வரையில் கல் கட்டடங் களும் மண் மேடுகளுமாக ஒரே சமாதி மயம்.

---

## யார் பைத்தியம்?



பைத்தியக்கார ஆஸ்பத்திரி வாயில் காப்போன் (வழியில் நிற்கும் போலீஸ்காரனிடம்):—ஐயா! இந்த வழியாக ஒரு பைத்தியம் ஓடினதே பார்த்தீர்களா ?

போலீஸ்காரன் :—அவன் எப்படி யிருப்பான் ?

வாயில் காப்போன் :— அவன் ஒல்லியாக, குட்டையாக 200 பவுண்டு கனமிருப்பான்.

போலீஸ்காரன் (ஆச்சரியத் துடன்):—எப்படி ஒல்லி மனுஷன் 200 பவுண்டு கனமிருப்பான் ?

வாயில் காப்போன் :—அவன்தான் பைத்தியமென்று அப்பவே நான் சொல்லி விட்டேனே!

சடங்குகள் முடிந்தன. சங்கின் அல றல்கூட அடங்கி விட்டது. சுடுகாட் டமைதி என்கிறார்களே, அது எப்படி யிருக்கும் என்பதை அன்றுதான் தெரிந்து கொண்டேன்! நடுநடுவே பண்டாரத்தின் ஒற்றைக் குரல் மட்டும்தான் ஒலித்துக் கொண்டிருந்தது.

“சார், நீங்க ஆகல்லியா?” என்ற கேள்வி என் சிந்தையைக் கலைத்து, தன்னுணர்வு பெறச் செய்தது. முன்னால் நோக்கினேன்.

சியாமளாவைக் குழியிலிறக்கி யிருந் தார்கள். இருந்த அந்தக் கிழிசல் புடவை யையும் உரித்துவிட்டு, வெறும் சல்லாத் துணியை மட்டும் போர்த்தியிருந்தார்கள். முகம் முதல் எல்லாம் மறைந்திருந்தது. அவள் கழுத்தில் தொங்கிய தாலி இப்போது அவள் கணவன் கையில் தொங்கிக் கொண் டிருந்தது.

நானும் முன்னால் சென்றேன். என் பங்கு மண்ணை எடுத்துக் குழியில் தூவி விட்டு அப்புறம் நகர்ந்தேன். வெட்டியான் குழியைத் தூர்க்க ஆரம்பித்தான். சியாமளா வின் உடல் கொஞ்சம் கொஞ்சமாக மறைய ஆரம்பித்தது. சங்கு, உடுக்கை, சேமக்கலம் எல்லாம் சுடுகாட்டையே அதிர அடித்துக் கொண்டிருந்தன. அவற்றையும் கிழித்துக் கொண்டு பண்டாரத்தின் குரல் தேவா ரத்தை ஓதியது.

எல்லாரும் சுடுகாட்டை விட்டுக் கிளம்பினோம். எனக்கு முன்னால் சென்ற இருவரின் சம்பாஷணை என் காதில் விழுந்தது.

“என்ன தம்பி! அந்தக் கந்தசாமி முதலியாரு பொண்ணைப் பார்த்திருக்கிறியா நீ? நல்லா செவப்பா லட்சணமா இருக்கும். ஆறாவது வரைக்குமோ என்னமோ படிச் சிருக்குதுன்னுங்க. அதைப் பார்த்து முடிச் சுப் போட்டுடலாமா?” என்று கேட்டான் ஒருவன்.

“ஆமாம், நான்கூட அந்தப் பெண்ணைப் பார்த்திருக்கேன். இப்ப என்ன அவசரம் அதுக்கு?” என்றான் மற்றவன்.

“அப்படியில்லே தம்பி! இப்படிச் சரின்னு சொல்லிட்டாலே நாளைக்கேயா காரியம் முடிஞ்சிடப் போவுது? எப்படியும் தை பிறக்கவேணுமா? செத்தவங்க செத்தவங்க தான், திரும்பியா வரப்போறாங்க. உம்மனசு தெரிஞ்சா மேலே காரியத்துலே பிரவேசிக் கலாம்னுதான் கேட்டேன்.”

“அதுக்கில்லேண்ணே அவங்க கொஞ் சம் பெரிய கையாச்சே. இரண்டாந்தாரமாக் கொடுப்பாங்களா? ...... ஆமாம்! என்ன செய்வாங்க பொண்ணுக்கு?”

முதலில் பேசியவன் ஏதோ பேசத் தொடங்கினான். அதற்குள் இரண்டாமவன் எதற்கோ பின்னால் முகத்தைத் திருப்பினான்.

“அட பாவி!” என்று நாவரையில் வந்து விட்ட சொல்லை வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டேன். ஆனால், என் மனசுமட்டும் படபடத்தது. இன்னும் இறந்த மனைவியைப் புதைத்துப் பதினைந்து நிமிஷம் ஆகவில்லை. ஸ்நானம்கூடச் செய்யவில்லை. இதற்குள் இன்னொரு கலியாணம்பற்றி யோசனையா?...... வழி எல்லாம் இதையே திரும்பத் திரும்பச் சிந்தித்தபடி வீடு வந்து சேர்ந்தேன். அங்கே நீலா எனக்காகத் துடித்துக் கொண்டிருந்தாள்; அந்தப் பெண் ணைப் பற்றிப் புதிய செய்தி சொல்லத்தான்.

“கேட்டேளா சேதி? அவ பக்திக்குத் தக்கபடிதான் அவ நிம்மதியாச் செத்திருக் கிறாள். சாகறதுக்கு முன்னால் ராத்திரி ஆம்படையானைப் பார்த்து, ‘உன்னையே நம்பினேன். ஆனால், நீ துரோகம் பண் ணிட்டே’ அப்படின்னு சொல்லி வெடுக்கு வெடுக்குன்னு கேக்கவேண்டிய கேள்வி யெல்லாம் கேட்டாளாம். கடைசியிலே, ‘இப்பத்தான் என் மனசு ஆறித்து. இனி நீ சுகம்மா இரு’ என்றாளாம். அப்புறம் எல்லாரையும் கூப்பிட்டு வச்சுண்டு, ‘நாளைக்கு இந்நேரத்துக்கு நான் இருக்க மாட்டேன். என்னாலே உங்களுக்கெல்லாம் ரொம்பக் கஷ்டம். நான் கொடுத்த சிரமத் துக்கு மன்னிச்சுடுங்கோ!’ன்னு சொல்லி இரண்டு கையும் கூப்பிக் கும்பிட்டாளாம். பிறகு தகப்பனாரைக் கூப்பிட்டுத் திருவாச கம் படிக்கச் சொன்னாளாம்.”

மூச்சு விடுவதற்காகச் சற்று நிறுத்தினாள் நீலா. சாகும் சமயத்தில் திருவாசகத்தின் நினைவா? சியாமளாவின் மனோ பக்கு வத்தை எண்ணி எண்ணி வியப்புற்றது என் மனம். நீலா மேலும் தொடர்ந்தாள்.

“இரண்டொரு தடவை அவர் தப்பாப் படிச்சாராம். அந்தப் பொண்ணு ‘அது தப்பு. இப்படிச் சொல்லணும்’ அப்படின்னு அவரைத் திருத்தினாளாம். கடைசியிலே ‘ஐம்புலனையும் அடக்குடா ஆறுமுகா! ஓம்! ஓம்! ஓம்!’ என்று சொல்லித்தாம். மூன் றாம் தடவை ‘ஓம்’னு சொல்லும்போதே மூச்சு அடங்கிப் போச்சாம்” என்று சொல்லிப் பெருமூச்சு விட்டாள் நீலா.

# தொடர்பு துண்டிக்கப் படுகிறது!

**ரஜனி**

கொழும்பு, மே 1

இலங்கைப் பார்லிமெண்டின் இரு சபைகளிலும் நிறைவேறிய குடியேற்ற வெளியேற்றச் சட்டம் இன்று முதல் பரிபூரணமாக அமுல் நடத்தப்பட வேண்டுமென்று பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகா பிரகடனம் செய்திருக்கிறார். சில தினங்களுக்கு முன்னர் இலங்கையின் புதிய ஹைகமிஷனர் ஸ்ரீ வி. குமாரஸ்வாமி பம்பாயில் சொல்லியதைப் போல இலங்கையும், இந்தியாவும் இரு தனி சுதந்திர நாடுகளாக இருப்பினும் பிரயாண விஷயங்களில் ஒரே தேசத்தைப் போலவே இருந்து வந்தன. இப்பொழுது பாக்கியிருந்த இந்தத் தொடர்பையும் இலங்கை துண்டித்துக் கொண்டு விட்டது. இதில் ஒரு விஷயம் கவனிக்கத் தகுந்தது. பாஸ்போர்ட் முதலான பிரயாண தஸ்தாவேஜுகளில்லாமல் இலங்கையை விட்டு யாரும் வெளியேறக் கூடாதென்றும் இலங்கைக்குள் யாரும் பிரவேசிக்கக் கூடாதென்றும் சேனநாயகா அரசாங்கம்தான் உத்தரவிட்டிருக்கிறது. ஆனால் இந்திய அரசாங்கமோ இந்தியாவுக்கு வரும் இலங்கையர்களிடமும் இந்தியாவை விட்டுப் போகும் இலங்கையர்களிடமும் பாஸ்போர்ட்டுகள் வற்புறுத்தப்பட மாட்டாதென்று பெருந்தன்மையுடன் அறிவித்திருக்கிறது. அதாவது இலங்கையர்களை இந்திய அரசாங்கம் இன்னமும் அந்நியர்களாகக் கருதவில்லை!

## இந்தியரின் நிலை

இலங்கை குடியேற்ற வெளியேற்ற கண்ட்ரோலர் அனுஷ்டித்து வரும் ஒரு புது நடவடிக்கை இலங்கை இந்தியர்களுக்குப் பெரும் திகிலை உண்டு பண்ணியிருக்கிறது. ரஜாவில் இந்தியாவுக்குப் போகும் இந்தியர்கள் இலங்கைக்குத் திரும்பிவர விரும்பினால் போகும்பொழுதே தங்களுடைய பாஸ்போர்ட்டில் குடியேற்ற வெளியேற்ற கண்ட்ரோலரிடமிருந்து ஒரு முத்திரை வாங்கிச் செல்ல வேண்டுமென்பது விதி. அப்படி முத்திரை வாங்கச் செல்லும் பொழுது இலங்கையில் ஐந்து வருடங்களுக்குக் குறையாமல் வசிப்பதை தஸ்தாவேஜு மூலமாக ருசுப்படுத்த வேண்டுமென்றும், அல்லாத பட்சத்தில் இந்தியாவுக்குச் சென்று திரும்ப பாஸ்போர்ட்டில் முத்திரை வைத்துத்தர முடியாதென்றும் கூறப்படுகிறதாம். இதன் நோக்கம், சென்ற ஐந்து வருடங்களுக்கிடையில் இலங்கைக்கு வந்தவர்களை ஒரு முறை இந்தியாவுக்குச் சென்றால் மறுபடி இலங்கைக்குத் திரும்ப முடியாதபடி தடுத்து விடுவது தான்!

இதில் ஒரு பெரிய சங்கடம் என்னவென்றால், சென்ற பத்துப் பதினைந்து வருடங்களாக இலங்கையிலிருப்பவர்களில் பலரிடமும் தாங்கள் முதல் முதலாக இலங்கைக்கு வந்ததை ருசுப்படுத்தும் தஸ்தாவேஜுகள் கிடையாது. பெரும்பாலான இந்தியர்கள் கல்வியறிவில்லாத சிப்பந்திகளும் தொழிலாளருமாகையால், அவர்கள் இது மாதிரி ஒரு சட்டம் வருமென்பதை எதிர்பார்த்து தஸ்தாவேஜுகளைப் பத்திரப்படுத்தி வைக்கவில்லை. ஆதலால் அவர்கள் அவசர வேலைகளுக்குக் கூட இந்தியாவுக்குப் போனால் இலங்கைக்குத் திரும்ப முடியாதே என்ற பீதியினால் கலங்குகிறார்கள். இந்தப் பீதியைச் சில விஷமிகள் வேண்டுமென்றே பல பொய் வதந்திகளை வேறு கிளப்பி விட்டு அதிகப்படுத்துகிறார்கள். இலங்கையில் குறைந்தது ஐந்து வருடங்களாக வசிக்காதவர்களையும் அப்படி வசித்ததை ருசுப்படுத்த முடியாதவர்களையும் அரசாங்கம் ஒரு மாத நோட்டீஸ் கொடுத்து வெளியேற்றப் போவதாக ஒரு வதந்தி பரவி வருகிறது. இதில் ஆதாரமே கிடையாது. இலங்கையை விட்டு ரஜாவில் இந்தியா செல்ல நினைப்பவர்கள் மட்டும்தான் குடியேற்றச் சட்டத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டுமே தவிர, மற்றவர்கள் எவ்விதக் கவலை கொள்ளவும் காரணமில்லை.

## பெரும் ஏமாற்றம்

டில்லியில் நடந்த இலங்கை-இந்திய வர்த்தகப் பேச்சுகளில் இலங்கை பரம திருப்தி யடைந்திருக்கிறது. ஆனால் இந்திய வட்டாரங்கள் மிகுந்த ஏமாற்றத்துக்கு உள்ளாகியிருக்கின்றன. பாகிஸ்தானுக்கும் பிரிட்டனுக்கும் இலங்கை, நடப்பு வருடத்தில் டன் 55 ஸ்டர்லிங் விலைக்குத் தேங்காய் எண்ணெயை விற்க ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது. அடுத்த வருடத்தில் 47 ஸ்டர்லிங் 12 ஷில்லிங்கிற்குக் குறையா

# காயம்!




மனும் 57 ஸ்டர்லிங் 12 ஷில்லிங்குக்கு மேற்படாமலும் தேங்காய் எண்ணெயை விற்க இலங்கை ஒப்பந்தம் செய்து கொள்ளுவதற்குச் சம்மதித்திருக்கிறது. இதே விலைக்குத் தனக்கும் எண்ணெயைக் கொடுக்க வேண்டுமென்று சென்ற வருடம் இந்தியா ஒரு விசேஷ தூதரை அனுப்பிக் கேட்டபொழுது இலங்கை முடியாதென்று சொல்லியதால்தான் அப்பொழுது நடந்த வர்த்தகப் பேச்சுகள் முறிந்து போயின. இப்பொழுது டில்லிப் பேச்சுகளில் நடந்ததென்ன? அதிலும் இலங்கை தன்னுடைய கட்சியை ஸ்தாபித்துக் கொண்டு விட்டது. அதாவது தேங்காய் எண்ணெயை மார்க்கெட் விலைக்கு அதாவது டன் 118 ஸ்டர்லிங் விலைக்கு இந்தியாவிடம் விற்கப் பேசி முடிவு செய்து கொண்டிருக்கிறது. பாகிஸ்தானுக்கும் பல்லாயிரம் மைல்களுக்கப்பாலுள்ள பிரிட்டனுக்கும் விற்கும் விலை 55 ஸ்டர்லிங்.

இலங்கையிலிருந்து கொச்சி, திருவாங்கூர் முதலிய இடங்களில் இறக்குமதியாகும் புகையிலைக்கு பவுண்டுக்கு எட்டு அணா விதமும் இந்தியாவின் மற்ற பாகங்களில் இறக்குமதியாகும் புகையிலைக்குப் பவுண்டுக்கு ஒன்பது ரூபாய் ஆறு அணா விதமும் தீர்வைவிதிக்கப்படுகிறது. ஆனால் இந்தியாவிலிருந்து இலங்கையில் இறக்குமதியாகும் பீடி, சிகரெட்டு, சுருட்டு முதலான புகையிலைச் சாமான்களுக்கு இலங்கை அரசாங்கம் பவுண்டுக்கு இருபது ரூபாய் பத்து சதம் வீதம் தீர்வை விதிக்கிறது. இதனால் இந்திய பீடி, சுருட்டு இறக்குமதி சென்ற வருடத்தை விட இவ்வருடம் பாதியாகக் குறைந்து விட்டது. இதுதான் இந்தியாவுக்கு இலங்கை காட்டும் வர்த்தகச் சலுகை!

டில்லி வர்த்தகப் பேச்சுகளில் இலங்கை இந்தியர்களின் அவதிகளுக்குக் காரணமான செலாவணிக் கட்டுப்பாடுகளைப் பற்றியும் இந்திய வர்த்தகர்களை இறக்குமதிக் கட்டுப்பாடுகளினால் ஒழித்துக் கட்டும் சதி நடவடிக்கைகளைப் பற்றியும் பேச்சுகள் நடக்குமென்றும் அதன்பயனாக சிறிதளவு நிவாரணமேனும் கிடைக்குமென்றும் இந்தியர்கள் எதிர்பார்த்தார்கள். இது சம்பந்தமாக இந்திய வர்த்தகக் கமிஷனர் டாக்டர் டி. ஜி. மேனனிடம் இந்திய வர்த்தகச் சங்கம் ஒரு மகஜரையும் சமர்ப்பித்தது. ஆனால் இவைகளைப்பற்றி மகாநாட்டில் பிரஸ்தாபம் எதுவும் ஏற்படாதது இலங்கை இந்தியர்களுக்கு பெருத்த அதிர்ச்சியையும் ஏமாற்றத்தையும் கொடுத்திருக்கிறது.

# கணக்கு வாத்தியார்

டி. எஸ். ஆர்.

கணித வகுப்பென்றால் எங்களுக்கு ரொம்பவும் உற்சாகம். அதற்குக் காரணம் கணிதம் அல்ல; அதைக் கையாளும் கணித ஆசிரியர் தான்.

மற்ற ஆசிரியர்கள் எல்லாம் குறித்த முக்கால் மணி நேரமும் ஓயாமல் ஓலமிட்டுக் கொண்டிருப்பார்கள். நாங்கள் கொட்டாவி விட்டுக் கொண்டு மணியோசையை எதிர் பார்த்திருப்போம். ஆமாம், ஒவ்வொரு வகுப்பு முடியும் போது மணி அடிப்பதுண்டு அல்லவா? அதைத்தான் எதிர் பார்த்திருப்போம்.

ஆனால் எங்கள் கணிதப் பெருமானோ நறுக்கென்று நாலு கணக்குப் போட்டு முடித்துவிட்டுப் பிறகு எங்களோடு வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருப்பார். பரிகாசம் செய்வதில் சமர்த்தர். பிள்ளைகளை வெகு ரசமாகக் 'கலாட்டா' செய்வார். ஆனால் நாங்கள் அருவருப்போ, மனக் கசப்போ அடைந்ததில்லை.

ஒருநாள் வழக்கம் போல் சில கணக்குகள் போட்டுவிட்டு லோகாபிராமமாகப் பேச ஆரம்பித்தார். அன்று என்னைச் சுட்டிக் காட்டி, "ராமசாமி, உன் கைகடிகாரத்தில் செகண்டுமுள் உண்டா? 'சட்'டென்று பதில் சொல்" என்றார்.

பிள்ளைகளெல்லாம் ஒருமுகமாக என்னையே உற்று நோக்கினார்கள். அன்றைக்கென நான், வழக்கத்திற்கு மாறாக முழுக்கை ஷர்ட் அணிந்திருந்தேன். இலேசாகப் பார்த்துச் சொல்லி விடலாம் என்றால் அதற்கும் வழியில்லாமற் போய்விட்டது. நான் என்ன பதில் சொல்வது? ஒருவாறாகத் தன்னம்பிக்கையை வரவழைத்துக் கொண்டு, "ஏன்? கடிகாரத்தில் செகண்டு முள் இருக்கத்தான் செய்கிறது!" என்றேன்.

பின்னர், ஆசிரியர் என் கடிகாரத்தை வாங்கி எல்லோரும் பார்க்கும் வண்ணம் தூக்கிக் காண்பித்தார். பிள்ளைகள் ஒரே அடியாய்ச் சிரிக்க ஆரம்பித்து விட்டனர். என் கடிகாரத்தில் 'செகண்டு முள்' இல்லாத விஷயம் அன்றுதான் எனக்குப் புலனாயிற்று.

"சரி, போகட்டும். உன் கடிகாரத்தின் பிளாஸ்டிக் பட்டையில் எத்தனை துவாரங்கள் உண்டு?" என்று இன்னொரு புதிரைத் தூக்கிப் போட்டார். மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. ஏனெனில் இது விஷயம் நான் கூர்ந்து கவனித்திருக்கிறேன். "ஆறு" என்று தயங்காமல் சொன்னேன். அருகேயிருந்த அமரநாத்தைக் கூப்பிட்டு ஆசிரியர் எண்ணச் சொன்னார். பொல்லாத பட்டை சமயத்தில் என்னைக் கை விட்டது. "ஏழு" என்று அறிவித்தான் அமரநாத். கொல்லென்று பிள்ளைகள் மறுபடியும் சிரித்தார்கள்.

என் மன நிலையை ஒருவாறு அறிந்து ஆசிரியர் பேசலானார் :

"இவை மிக மிக அற்ப விஷயங்கள்; இவைகளைப் பற்றி அறிய வேண்டியது அவசியமில்லை என நீங்கள் கருதலாம். நான் அதைப் பற்றிச் சொல்ல வரவில்லை. கண்ணால் பார்ப்பதையெல்லாம் கூர்ந்து கவனிக்க வேண்டும். குருடர்களாய் நடமாடிக் கொண்டிருப்பதற்காகவா ஆண்டவன் நமக்குக் கண்கள் கொடுத்திருக்கிறான்? பார்த்ததெல்லாம் மனதில் பதிய வேண்டும். இல்லையேல் விலங்குகளைக் காட்டிலும் மனிதன் ஏன் உயர்ந்தவனாகக் கருதப்பட வேண்டும்?"

பின்னர், "நான் சில கேள்விகள் உங்களைக் கேட்கலாமா, ஸார்?" என்றேன்.

"ஆகா, அதற்கென்ன! தயக்கமின்றிக் கேள்!" என்றார்.

"உங்கள் கோட்டில் எவ்வளவு பொத்தான்கள் இருக்கின்றன?" என்றேன்.

"முன் பக்கத்தில் ஆறு. மத்தியப் பிரதேசத்தில் என் சுற்றளவை முன்னிட்டு ஒரு பொத்தானை நான் பொருத்துவதில்லை. வலக்கையில் இரண்டு. இடக்கையில் இரண்டு. அதில் ஒன்று உடைந்தது. ஆக மொத்தம் பத்து" எனப் 'பளிச்' சென்று பதில் சொன்னார்.

தொழிற் படாமல் தனித்து நிற்கும் பொத்தானைப் பார்த்துப் பிள்ளைகள் சற்றுச் சிரித்தனர்.

நான் விடவில்லை ஆசிரியரை. "ஸார்! நம் பள்ளிக்கூடமெத்தைப் படியில் எத்தனை படிக்கட்டுகள்?" என்று கேட்டு வைத்தேன்.

"இருபத்தி ஆறு," என்று 'சட்'டெனத் தெரிவித்தார். அவர் பதிலளித்த மாதிரியிலிருந்து தவறாக இராது என்று நினைத்தோம். எதற்கும் பின்னால் எண்ணிப் பார்த்து விட்டோம். ஆசிரியர் சொன்னது சரியே. அவரது ஞாபக சக்தியை நினைந்து வியந்தோம்.

அன்று தொடங்கியது எங்கள் பள்ளியில் புதியதோர் சகாப்தம். ஒரு மகத்தான கேள்விப் படலம் பிள்ளைகளிடையே மூண்டெழுந்தது. பரீக்ஷை, பாடத்திட்டம் இவைகளுக்குப் புறம்பானவை, கேள்விகள் என்று நான் சொல்ல வேண்டுவதில்லை. ஓழிந்த நேரங்களிலெல்லாம் பிள்ளைகள் கூட்டம் கூட்டமாகக் கூடுவார்கள். ஒருவருக் கொருவர் எதிர் பாராத கேள்விகளைப் போட்டுக் கொண்டே போவார்கள்.

1. பள்ளிக் கூடத்தில் எத்தனை ஜன்னல்கள் இருக்கின்றன?

2. வகுப்பில் அப்பாசாமி, பங்காருசாமி, மன்னார்சாமி போன்ற 'சாமி'கள் அதிகமா, அல்லது விசுவநாதன், துளசிநாதன், இயேசு நாதன் போன்ற 'நாதன்'கள் அதிகமா?

3. பியூஸான பல்புகளின் எண்ணிக்கை என்ன?

4. வலது புறம் இராப் வகிடு பிரிக்கும் நபர்களின் தொகை என்ன?

5. தினமும் தங்கள் சொந்த மோட்டாரில் எவ்வளவு பிள்ளைகள் வந்து இறங்குகிறார்கள்?

6. எத்தனை பிள்ளைகள் 'எவர் ஸில்வர்' டிபன் செட்டுகளில் டிபன் எடுத்து வருகிறார்கள்?

பிள்ளைகளின் மனம் இவ்விதம் பலவாறாக வேலை செய்யத் தொடங்கியது. ஒவ்வொருவனும் ஒரு குறிப்புப் புத்தகம், பென்ஸில் சகிதம் எப்பொழுதும் காட்சியளிப்பான். மந்திரத்தை ஜபிப்பது போல் ஒரு சிலர் ஏதோதோ எண்களையெல்லாம் முணுமுணுத்துக் கொண்டே போவார்கள். எங்கு மறந்துவிடுமோ என்ற பயம்போலிருக்கிறது.

நாங்கள் எவ்வளவு முயன்றும் முழு வெற்றி பெறுவது எங்களுக்குச் சாத்தியமில்லாமல் போயிற்று. எதிர்பாராத புதுமாதிரியான கேள்வி ஒன்று எங்களைத் திணற அடித்துவிடும். ஆனால் எங்கள் கணித ஆசிரியரோ எதிர்பார்ப்பட்ட கேள்விக்கும் சரியான பதிலை உடனே கொடுத்து விடுவார்.

ஏதோ கடவுள் இருக்கிறான் என்கிறார்கள். அவன் எல்லாவற்றையும் அறிந்தவன் என்கிறார்கள். அது விஷயம் எனக்கு உறுதியாகச் சொல்லத் தெரியாது. ஆனால் எங்கள் கணித ஆசிரியரை, அவர் கண்ட அளவிலும் கேட்ட அளவிலும், சர்வக்ஞன் என்று சொல்வதை. யாரும் ஆட்சேபிக்க முடியாது.

ஒரு நாள் எங்கள் தமிழாசிரியர் குறள் நடத்திக் கொண்டிருந்தார். விஷயம் புல்லறிவாண்மை. "நீவிர் கற்கும் இக் குறள், பொருட்பால் அங்கவியலில் 85-ம் அதிகாரத்தினுட் காண்க. தான் சிற்றறிவினனாக இருந்தும் தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொற் கொள்ளாமையே புல்லறிவாண்மை எனப்படும்."

"ஏவவுஞ் செய்கலான் தான்தேறானவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்."

"புல்லறிவாளன் தனக்குறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லியுஞ் செய்யான். அதுவன்றித் தானாகவும் இவை செய்வன வென்று அறியான். உயிர் போமளவும் நிலத்திற்குப் பொறுத்தற்கரியதோர் நோயாவான்."

குறளை நன்றாக விளக்கிக் கூறிவிட்டுப் பின்னர் எங்களைப் பார்த்து, "ஏதேனும் தெளிவு படாவிடில் கேட்கவும்" என்றார்.

கணித ஆசிரியரின் அறிவுத் திறத்தை மனத்தில் வைத்துத் தமிழ் ஐயாவைப் பதம் பார்க்க எண்ணினேன்.

"ஐயா, இக்குறளின் கண் தோன்றும் ஒற்றெழுத்துக்களில் (க், ங், ச் போன்றவை) வல்லினம் மிகுதியா, இடையினம் மிகுதியா? தயவு செய்து சட்டென பதில் அளிக்கவும்" என்று கேட்டேன்.

நான் வாய்மூடுமுன் பிள்ளைகள் கொல்லெனச் சிரித்து விட்டனர். தமிழாசிரியரின் முகம் கோபத்தால் சிவந்தது.

"நும் புல்லறிவாண்மைக்கு மற்றுமோர் சான்று வேண்டுவதில்லை. நீவிர் பேசியதே போதும்" என்று கடுந்தமிழில் கோபித்துக் கொண்டார்.

அப்போது நல்ல வேளையாக மணியடித்தது. நெருக்கடியை ஒரு வழியாகத் தீர்த்து வைத்தது!

கொஞ்சநாட்களாக எங்கள் கணக்கு வாத்தியார் கண்ணில் காணவில்லை. அவர் ரேஷன் அதிகாரிகளுக்குத் தம் புத்திர சந்தானம் எவ்வளவு என்று கணக்குக் கொடுத்ததில் ஏதோ தவறு செய்து விட்டாராம். அதனால்தான் அவர் காணவில்லையாம்! ஆனைக்கும் அடி சறுக்கும் என்பது எவ்வளவு உண்மை!



# சிசுக்கள் இந்த ருசியான பானத்தை விரும்புகின்றனர்



## ஓவல்டின்

### அவர்களுக்கு திட சரீரம் அளிக்கிறது

வளரும் குழந்தைகளுக்கு 'ஓவல்டின்' கொடுங்கள். அது அவர்களுக்கு வலிமை ஊட்டி போஷாக்கு அளிக்கிறது. அவர்கள் ஆடும்போது விரயமாகும் சக்தியை 'ஓவல்டின்' திரும்ப அளிக்கிறது. குழந்தைகள் அதன் மணத்தை விரும்புகின்றனர்! அதில் சத்துள்ள பார்லி, பால், கொக்கோ, வைட்டமின்கள் முதலியவை அடங்கியிருக்கின்றன. உங்கள் குழந்தைகள் ஆரோக்கியப் பிரஜைகளாக, அவர்களுக்கு காலையிலும் மாலையிலும் 'ஓவல்டின்' கொடுங்கள். அசல் 'ஓவல்டின்' தானா என்று பார்த்து வாங்குங்கள். போலிகள் ஜாக்கிரதை!

# 'OVALTINE'

## 'ஓவல்டின்'

### உங்கள் குழந்தைகளின் ஆரோக்கியத்துக்கு




டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட், தபால் பெட்டி நெ. 1205, மதராஸ், மற்றும் பம்பாய், கராச்சி, கல்கத்தாவிலும். தி இம்பீரியல் & ஸ்காட்டிஷ் ஜாயின்ட் கோவாபரேடிவ் ஹோல்ஸேல் சொஸைட்டி லிமிடெட், கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

OV.267

# GOOD ADVICE *for* EVERY *MOTHER*



ஜலதோஷம் குழந்தைகளுக்கு வெகு எளிதில் பிடித்து விடுகிறது. அதற்கு உடனே பரிகாரம் தேடாவிடில் பின்பு அதிக தொந்தரவு என்பதை ஒவ்வொரு தாயும் அறிவாள். நோய் பரவுவதையும் இருமலையும், டஸனால் விரைவில் தடுக்கிறது குழந்தைகளுக்கு டஸனால் மிக ருசிகரமானது




# TUSSANOL

COUGH SYRUP

REGISTERED TRADE MARK

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119. Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

# டி.எஸ்.ஆர்.

சந்தனாதித் தைலம்




அரைக்கீரைவிதை தைலம்



டி. எஸ். ஆர். தைலங்களை ஆயிரக்கணக்கான மக்கள் விரும்பி உபயோகிப்பதற்குக் காரணம் அவைகளின் சிறந்த குணமே. ஆயுர்வேத சாஸ்திரிய முறைப்படி தயாரித்த சந்தனாதித் தைலம், அரைக்கீரை விதைத் தைலம் மூளைக்குக் குளிர்ச்சியையும் சருமத்திற்குப் பளபளப்பையும் கொடுக்கின்றன.



## டி.எஸ்.ஆர் & கோ.
கும்பகோணம்

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:

சுராஜ் ஏஜன்ஸீஸ்
157, லாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, மதராஸ்

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்:

B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:

சேகர்ஸ், திருப்பத்தூர் (N. A.)

# குழந்தைகளின் சரல் குலைக் கட்டிகளுக்கு இன்றியமையாத மருந்து!



குழந்தைகளின் சரல் குலைக் கட்டிகளை குணப்படுத்தும் ஜம்பியின் லிவர்க்யூர் வைத்திய சாஸ்திரத்திற்கே அவசியமானதும் பெருமை அளிக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

இந்த அற்புத நிவாரணியால், முற்றிப் போய் கைவிடப்பட்ட சரல் குலைக் கட்டி வியாதிகளும் ஆச்சரியகரமான முறையில் குணப்படுத்தப் பட்டிருக்கிறது என்று இந்தியாவில் உள்ள பிரக்யாதி பெற்ற பல டாக்டர்களால் பாராட்டப் பட்டுள்ளது.



## ஜம்பியின லிவர்க்யூர்

ஜம்பி வெங்கடரமணய்யா அன் ஸன்ஸ்
மைலாபூர் மதராஸ் 4 (போன் நெ. 8133)
தெப்பகுளம் திருச்சி, பெரிய தெரு கும்பகோணம், பெங்களூர், பம்பாய் 4. (போன் நெ. 41563)
மற்றும்: டில்லி, கல்கத்தா.

J. 233

REGD. NO. M. 4392

# கடல் கன்னி

## 4. கிளிமொழியாளின் சாபம்!

அரசனைக் கைது செய்தவுடன் சளிப் மன்னன் அவனுடைய மகள் கிளிமொழியாளைத் தேடிச் சென்றான். ஆனால் இளவரசி எங்கும் காணப்படவில்லை. அரண்மனையில் ஒரே ஆரவாரத்துடன் சண்டை நடப்பதை அறிந்த இளவரசி தனது தோழிகளுடன் கடலிலிருந்து மேலே பாய்ந்து ஒரு பாலைவனத் தீவுக்குப் போய்ச் சேர்ந்தாள்.

சளிப் மன்னனுடன் சென்ற ஆட்களில் சிலருக்கு, பரோஷா ராணியால் அனுப்பப்பட்ட படையினர் தங்கள் மன்னனுக்கு உதவி புரிந்தது தெரியாது. ஏனெனில், அவர்கள் சளியுடன் அரண்மனைக்குள் செல்லவில்லை. தங்கள் அரசன் அரண்மனையிலிருந்து திரும்பி வராததைக் கண்டு, அவனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டது என்று அஞ்சி அவர்கள் ராணியிடம் ஓடி விஷயத்தைச் சொன்னார்கள். உடனே ராணிக்குக் கவலை ஏற்பட்டது. முழுமதிக்கு மனவருத்தம் தாங்கவில்லை. அவனுக்காகத்தானே சளிப் இத்தனை கஷ்டங்களுக்கு உள்ளாக நேர்ந்தது? அதை நினைக்கும் போது முழுமதிக்குச் சமாண்டல் அரசன் மீது கோபம் உண்டாயிற்று. தன் மாமனை எப்படி மீட்டு வருவது என்று அவனுக்குத் தெரியவில்லை. அவன் கடலடியிலிருந்து மேலே தாவினான். எதிர்பாராத விதமாக, கிளிமொழியாள் இருந்த பாலை வனத்துக்கு அவனும் வந்து குதித்தான்.



முழுமதி அந்தப் பாலைவனத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டுக் கொஞ்சம் இளைப்பாற எண்ணி ஒருபுறம் அமர்ந்தான். அவனுக்குச் சமீபத்திலிருந்து ஏதோ பேச்சுக்குரல் காதில் விழுந்தது. முழுமதி வியப்புடன் திரும்பிப் பார்த்தான். அங்கே மிகவும் அழகு வாய்ந்த கன்னிகை ஒருத்தி நின்றாள். அவளுடைய தோற்றத்தையும் அழகையும் பார்த்து அவள் கிளிமொழியாளாகத்தானிருக்க வேண்டும் என்று முடிவு செய்தான். பயத்தினால் தன் தந்தையின் அரண்மனையை விட்டு அவள் ஓடி வந்திருக்கவேண்டும் என ஊகித்தான். உடனே முழுமதி, அவ்வழி தன் தோழிகளுடன் நின்று கொண்டிருக்குமிடத்தை நோக்கிச் சென்றான்.

"குமாரி, உன்னைப் பார்த்தால் மிகவும் வேதனைக்குள்ளாகியிருப்பதாய்த் தோன்றுகிறது. நீ யார்? உன் மனக் கலக்கத்துக்குக் காரணம் என்ன? என்னிடம் சொன்னால் நான் அவசியம் உனக்கு உதவி செய்வேன்!" என்று அன்போடு சொன்னான் முழுமதி.

இதைக் கேட்ட கிளிமொழியாள் "நான்தான் சமாண்டல் அரசனின் மகள் கிளிமொழியாள். சளிப் என் தந்தையை எக்காரணம் பற்றியோ சிறைப் படுத்தி விட்டான். அதனால் நான் அரண்மனையிலிருந்து தப்பியோடி வந்து விட்டேன்" என்றாள்.

இதைக் கேட்டு முழுமதி மகிழ்ச்சியடைந்தான். மாமன் சளிப்பிற்கு யாதொரு ஆபத்தும் ஏற்படவில்லை. சமாண்ட

ளுக்கு இனி அவனே அரசனாகவும் ஆகிவிட்டான் என்று அறிந்தான்.

தான் யார் என்பதை முழுமதி கிளிமொழியாளுக்குத் தெரிவித்தான். அவளுடைய தந்தையின் அரண்மனையில் சண்டை ஏற்பட்டதன் காரணத்தை விளக்கினான். அதோடு அவளைத் தான் மிகவும் காதலிப்பதாகவும் கூறினான். உடனே அவளுடைய தந்தையிடம் அழைத்துச் சென்று அவருடைய சம்மதத்துடன் அவளை மணந்துகொள்ள விரும்புவதாகவும் சொல்லி அவள் விருப்பத்தைக் கேட்டான். அவளைப் பத்திரமாக அவளுடைய தந்தையிடம் சேர்த்து விட்டால் அந்த நல்ல காரியத்திற்காக அவளைத் தனக்கு மணம் செய்து வைப்பான் என்று முழுமதி முழு மனதுடன் நம்பினான்.

முழுமதியின் அழகையும், இனிமையான பேச்சையும் கேட்டுக் கிளிமொழியாள் மகிழ்வுற்றாள். ஆனாலும் தனது தந்தையைத் துன்பத்திற் காளாக்கினவன், தன்னை இந்தத் துர்க்கதியான நிலைக்குக் கொண்டு வந்தவன் என்று உள்ளூற அவன்மீது கோபம் கொண்டாள். அவனைத் தன் விரோதியென்றே கருதினாள். அவனிடமிருந்து எப்படியும் தப்பிவிடுவது என முடிவு செய்தாள்.

ஆனால் முழுமதியிடம் கோபத்தைக் காட்டினால் தான் தப்பமுடியாது என்பதைக் கிளிமொழியாள் உணர்ந்தாள். அவனிடம் ஆசை கொண்டிருப்பது போலவும் அவனைக் கலியாணம் செய்து கொள்ள விரும்புவது போலவும் பாசாங்கு செய்தாள். தன் ஆசைக்கு அடையாளமாக அவனிடம் கையை நீட்டினாள். முழுமதியும் ஆவலுடன் அவள் கையை எடுத்து முத்தமிட வந்தான். அச்சமயம் கிளிமொழியாள் அவனைப் பின்னுக்குத் தள்ளினாள். ஒரு கைத் தண்ணீரை அவன் முகத்தில் தெளித்து, "அற்பனே! சிவப்பு மூக்கும் சிவப்புக் கால்களும் உள்ள வெள்ளைநிறப் பட்சியாய் நீ மாறக் கடவாய்!" என்று சபித்தாள். உடனே முழுமதி பட்சியாக மாறினான். கிளிமொழியாள் தன் தோழிகளில் ஒருத்தியைக் கூப்பிட்டு, "இந்தப் பட்சியைச் சொட்டுத் தண்ணீர் கூட இல்லாத கற்பாறைகள் நிறைந்த ஒரு தீவுக்குக் கொண்டு போய் விட்டுவிடு!" என்று கட்டளையிட்டாள்.

ஆனால் தோழியோ பட்சியின்மீது அநுதாபம் கொண்டாள். எஜமானியே தனது செய்கைக்காக அப்புறம் வருந்துவாள் என்பது அவளுக்குத் தெரியும். கிளிமொழியாள் இயற்கையாகவே மிகவும் அன்பு நிறைந்தவள். ஆகையால் அந்தத் தோழி பட்சியை ஜன நட



மாட்டமுள்ள ஒரு அழகிய தீவில் கொண்டு போய் விட்டுவிட்டுத் தன் எஜமானியிடம் வந்து சேர்ந்தாள்.



முழுமதி இந்தக் கதிக்கு ஆளான சமயம் சலீப் ஒளிமொழியானைத் தேடிக்கொண்டிருந்தான். ஆனால் எங்கு தேடியும் அவனைக் காணாததால் தனது அரண்மனைக்கே திரும்பி வந்தான். சமாண்டல் அரசனைப் பத்திரமாக ஒரு அறையில் போட்டுப் பூட்டச் செய்தான். சமாண்டல் நாட்டைத் தனது ஆட்களைக் கொண்டே ஆட்சி புரிய ஏற்பாடு செய்தான். தனது நாட்டுக்குத் திரும்பியவுடன் தன் மருமகன் காணமற்போன செய்திதான் முதன் முதலில் அவன் காதில் விழுந்தது. உடனே அவனைத் தேட எட்டுத் திக்குகளுக்கும் தூதர்களை அனுப்பினான்.

ஆனால் பாரசிகத்தின் இளமன்னனை முழுமதி எங்கு தேடியும் அகப்படவில்லை. அவனைக் கண்டு பிடிக்கும் வரையில் தூதர்கள் திரும்பி வரலாகாது என்று சலீப் கட்டளையிட்டான். இதற்கிடையில் அவன் சமாண்டல் நாட்டை நேரில் பார்வையிடச் சென்றான். சமாண்டல் அரசன் கைதியாயிருந்தாலும் மன்னனுக்குள்ள மரியாதையுடன் அவன் நடத்தப்பட்டான்.

இந்தச் சமயத்தில் முழுமதியின் தாயாரான கடலழகி தன் தாயாரைப் பார்ப்பதற்காக வந்தாள். சலீபுடன் சென்ற தன் மகனைப் பற்றிய தகவல் ஏதும் கிடைக்கவில்லையாகையால் அதைப் பற்றி விசாரித்து அறிந்து கொள்வதற்காக அவள் அங்கு வந்தாள். பரோஷா ராணியும் நடந்ததையெல்லாம் விவரமாகத் தன் மகளுக்குத் தெரிவித்தாள். தன் மகன் காணமற்போனது கேட்டுக் கடலழகி துயரத்தில் ஆழ்ந்தாள். ஆனால் தன் மகன் இறந்து போயிருக்க மாட்டான் என்னும் நம்பிக்கை அவளுக்கு இருந்தது. ஆகையினால் ராஜ்யத்தைத் தன் மகனுக்காகக் காப்பாற்றி வைக்க மீண்டும் பாரசிகத்துக்கு வந்தாள். கடலழகி ராஜ்ய விஷயங்களைத் தானே நேரில் கவனிக்க ஆரம்பித்தாள். தன் மகன் முழுமதி சிலகாலம் தனது கடல் உறவினருடன் இருந்துவர ஆசைப்பட்டுக் கடல் ராஜ்யத்தில் இருப்பதாகத் தனது குடிமக்களுக்கு அறிவித்தாள். இதைப் பாரசிக நாட்டு மக்களும் நம்பித் திருப்தியடைந்தனர். கடலழகி தனது மகன் என்னவானான் என்பது தெரியாமல் அவனையே நினைத்துக் கலங்குகிறாள் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்?

இதே சமயத்தில் பட்சியாக மாறிய முழுமதி மிகவும் கவலையுற்றிருந்தான். மறுபடியும் பாரசிகத்துக்கு எப்படிச் செல்வது என்று அவனுக்குத் தெரியவில்லை. ஆனால் தன் தாய் நாட்டிற்குச் சென்றாலும் என்ன பிரயோஜனம்? அங்கே சென்றால் இந்த வெள்ளைப் பட்சிதான் தங்கள் மன்னன் என்பது பாரசிக நாட்டு மக்களுக்கு எப்படித் தெரியப் போகிறது? ஆகையால் பாரசிகத்துக்குப் போகும் ஆசையை மறந்து பட்சிகளுடன் பட்சியாய், அவைகளின் உணவையே உட்கொண்டு அவன் காலந்தள்ளிவந்தான். காலை நேரத்தில் பிற பட்சிகளுடன் பறப்பதும் இரவில் ஏதாவது ஒரு மரப் பொந்தில் தூங்குவதுமாக முழுமதியின் வாழ்க்கை நடந்து வந்தது.

இப்படியிருக்க ஒருநாள் ஒரு வேடன் பட்சி பிடிக்கும் நோக்கத்



துடன் வலையை எடுத்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். அச் சமயம் மரத்திலிருந்த வெள்ளைப் பட்சியின் அழகைப் பார்த்து அவன் வியந்து அதைத் தன் வலையில் சிக்கவைத்தான். உடனே அதை ஒரு அழகான கூண்டில் அடைத்தான். மறுநாள் அதை அந்தத் தீவின் அரசனிடம் கொண்டு போனான். அவனிடம் அந்தப் பட்சியைக் காண்பித்துப் பத்துத் தங்க நாணயங்களுக்கு அதை விற்றான்.

அந்தத் தீவின் அரசன், தான் சாப்பிடும்பொழுது புதிதாக வாங்கிய வெண் பறவையைத் தன்னிடம் கொண்டுவரச் செய்தான். அதைக் கூட்டிலிருந்து எடுத்து அதன் அழகைப் பார்த்து ஆனந்தமடைந்தான். ஆனால் என்ன ஆச்சரியம்! அந்தப் பட்சி அரசன் கையிலிருந்து பறந்து மேஜை மீதிருந்த ரொட்டி முதலிய உயர்ந்த தின் பண்டங்களைக் கொத்தித் தின்றது. ஒரு பட்சி மனிதர் உண்ணும் உணவை உண்பது கண்டு ஆச்சரியமடைந்த அரசன் தன் ராணியை அழைத்து அந்த நூதனப் பட்சியைப் பார்க்கச் சொன்னான். (தொடரும்)

### இதோ விடை!

இதுவரை நீங்கள் கணக்குக்கு விடையைக் கண்டு பிடித்தீர்களல்லவா? இப்பொழுது விடைக்குக் கணக்கைக் கண்டு பிடியுங்கள் — இதோ விடை:

1,11,11,11,111

எந்த எண்களோடு எந்த எண்களைக் கூட்டினால் இந்த விடை வரும்?—எழுதி வைத்திருந்து அடுத்த வாரம் இதே இடத்தைப் பாருங்கள்.

சென்ற இதழில் வெளியாகியிருந்த புதிரில் ராமு வந்து இடது பக்கத்தில் உட்கார்ந்திருந்த பயல் யார், தெரியுமா?—இச்சுப் பயல்தான்!

# யாருக்குத் தண்டனை?

கே. இ. என்.

‘டண், டண், டண்’ என்று மணி பத்து அடித்தது. மாணவர்கள் எல்லோரும் அவரவர்கள் வகுப்பில் நுழைந்தனர். உபாத்தியாயர்கள் பரபரப்புடன் இங்கும் அங்கும் ஓடினர்.

ஒரு வகுப்பில் மட்டும் ஒரே ரகளை! தலைமை ஆசிரியர் கோபத்துடன் அந்த வகுப்புக்குள் நுழைந்தார். எல்லாப் பையன்களும் அவர் வந்ததைக் கூடக் கவனிக்காமல் ஒரே கூச்சல் போட்டுக் கொம்மாளம் அடித்தனர். அந்தப் பையன்களுக்கு மத்தியில் ஒரு பெரிய பையன் பெரிய குரலில் கத்திக் ‘கலாட்டா’ செய்தான். தலைமை ஆசிரியர் எல்லாவற்றையும் பார்த்தார். அவருக்குக் கோபம் பிரமாதமாக வந்தது. அதிகமாகச் சத்தம் போட்டுக்கொண்டிருந்த அந்தப் பெரிய பையனிடம் போய், அவன் காதைப் பிடித்துத் திருகி, கரகரவென்று இழுத்துக் கொண்டு தம் அறைக்குப் போனார். அங்கே ஒரு மூலையில் அவனை நிறுத்தி, “இங்கேயே மண்டி போட்டு நில்! அசையாதே! ஹும்; பேசாதே! பேசினால் முதுகை உரித்துவிடுவேன்!” என்று கைப் பிரம்பைக் காட்டினார்.



அவன் நடுங்கிப் போய் மூலையில் முழந்தாள் மண்டியிட்டு நின்றான். தலைமை ஆசிரியர் தம் மேஜை அருகில் உட்கார்ந்துகொண்டு அவர் வேலையைக் கவனிக்க ஆரம்பித்தார்.

ஐந்து நிமிஷம் கழிந்தது. ஒரு சின்ன வாண்டுப் பயல் தலைமை ஆசிரியரின் அறைக் கதவுக்கு அருகில் வந்து நின்றான். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் அவன் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, “ஸார்......ஸார்......!” என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

தலைமை ஆசிரியர் இன்னும் கோபம் நீங்காதவராய் “என்ன?” என்றார்.

சின்னப் பயல் கெஞ்சுகிற பாவனையில், “எங்கள் புது வாத்தியாரைக் கொஞ்சம் வெளியிலே விடுகிறீர்களா, ஸார்?” என்று கேட்டான்!

தம்முடைய தண்டனைக்கு உள்ளான ‘பெரிய பையன்’ புது வாத்தியார் என்பது அப்பொழுது தான் தலைமை ஆசிரியருக்குத் தெரிந்தது!